முனிவன்மால்செஞ்சடையான் முக்கணனென்று
முனிவன்மால்செய்வான்முன் னிற்கு — முனிவன்மால்
போற்றார்புரமெரித்த புண்ணியன்றன்பொன்னடிகள்
போற்றாநாளின்று புலர்ந்து. (எக)

புலர்ந்தால்யானுற்றேன் புறனுரையுமஃதே
புலர்ந்தானூர்புன்கூரா னென்றும் — புலர்ந்தாய
மண்டளியனம்மா னவர்தம்மடியார்தம்
மண்டளியன்பின்போ மனம். (எஉ)

மனமாயநோய்செய்தான் வண்கொன்றைத்தாரான்
மனமாயவுள்ளார வாரான் — மனமாயப்
பொன்மாலைசேரப் புனைந்தான்புரிகுழலைப்
பொன்மாலைசேர்சடையான் போந்து. (எங)

போந்தார்புகவணைந்தார் பொன்னேர்ந்தார்பொன்னுருவ
போந்தாரொழியார் புரமெரித்தார் — போந்தா
ரிலங்கோலவாண்முகத் தீசனுக்கெல்லே
யிலங்கோலந்தோற்ப தினி. (எச)

இனியாருமாளாய வென்னுவர்கொலென்றோ
ரினியானைக்குருகையிருக்கைக் குன்றா — ரினியானை
தாளங்கையாற்பாடித் தாழ்சடையான்றாளடையா
தாளங்கையாற்றொழுவார் தாம். (எரு)

தாமரைசேர்நான்முகற்கு மாற்குமறிவரியார்
தாமரைசேர்பாம்பர் சடாமகுடர் — தாமரைசேர்
பாணியார்இரக்கவிப்பர் பார்தோம்புநான்மறையார்
பாணியார்இரக்கவிப்பர் பார். (எசா)

பார்கால்வானீர்தீப் பகலோன்பனிமதியன்
பார்கோலமேனிப் பவனாகித்தே — பார்கோலத்
தோகைநலத்தானரியக் கூறுதியோன்றேர்ந்தே
தோகைநலத்தானுரிய கோ. (எஎ)

கோப்பாடியோடாதே நெஞ்சமொழிகூத்தன்
கோப்பாடிக்கோகரணங் குற்றாலங் - கோப்பாடிப்
பின்னைக்காய்நின்றார்க் கிடங்கொடுக்கும்பேரருளான்
பின்னைக்காமெம்பெருமான் பேர். (அo)

பேரானையீருரிவை போர்த்தானையாயிரத்தெண்
பேரானையீருருவம் பெற்றானைப் - பேராநஞ்
சுண்டானையுத்தமனை யுள்காதார்க்கெஞ்ஞான்று
முண்டாநாளல்ல வுயிர். (அக)

உயிராயமூன்றொடுக்கி யைந்தடக்கியுள்ளத்
துயிராயவொண்மலர்த்தா ளூடே - யுயிரான்
பகர்மனத்தான்பாசுபதன் பாதம்பணியப்
பகர்மனமேயாசைக்கட் பட்டு. (அஉ)

பட்டாரண்பட்டரங்க னம்மான்பரஞ்சோதி
பட்டாரெலும்பணியும் பாசுபதன் - பட்டார்ந்த
கோவணத்தான்கொல்லேற்ற னென்றென்றுநெஞ்சமே
கோவணத்தாம்பனையே கூறு. (அங)

கூற்றும்பொருளும்போற் காட்டியென்கோல்வளையைக்
கூற்றின்பொருண்முயன்ற குற்றாலன் - கூற்றின்
செருக்கழியச்செற்ற சிவற்கடிமைநெஞ்சே
செருக்கழியாமுன்னமே செய். (அச)

செய்யான்கருமிடற்றான் செஞ்சடையான்றென்பொழில்சூழ்
செய்யான்பழனத்தான் மூவுலகுஞ் - செய்யாமு
னட்டுணையய்நின்றானை நாடுதும்போய்நன்னெஞ்சே
நாட்டுணையாய்நின்றானை நாம். (அரு)

நாவாயகத்துளதே நாமுளமேநம்மீச
னாவாய்போனன்னெறிக்க ணுய்க்குமே - நாவாயாற்
றுய்க்கப்படும்பொருளைக் கூட்டுதுமற்றவர்க்காட்
டுய்க்கப்படுவதாஞ் சூது. (அசா)

குதொன்றுனக்கறியச் சொல்லினேனன்னெஞ்சே
சூதன்சொலற்கரிய சோதியான் - சூதின்
கொழுந்தேன்கமழ்சோலைக் குற்றாலம்பாடிக்
கொழுந்தேயிழந்தேன் குருகு. (௮௭)

குருகிளவேய்த்தோண்மெலியக் கொங்கைமார்புல்லிக்
குருகிளையார்கோடு கொடாமே - குருகிளரும்
போதார்கழனிப் புகலூரமர்ந்துறையும்
போதாகின்பொன்முடிக்கட் போது. (௮௮)

போதரங்கவார்குழலா ரென்னுவார்நன்னெஞ்சே
போதரங்கநீர்கரந்த புண்ணியனைப் - போதரங்கக்
கானகஞ்சேர்சோதியே கைவிளக்காகின்றுடுங்
கானகஞ்சேர்வாற்கடிமை கல். (௮௯)

கற்றானஞ்சாடுகா வாலிகளந்தைக்கோன்
கற்றனைக்கல்லாத நாளெல்லாங் - கற்று
னமரர்க்கமர ரர்க்கடிமைபூண்டா
ரமரர்க்கமரரா வார். (௯௦)

ஆவாமனித ரறிவிலரேயாதொன்று
மாவார்போற்காட்டி யழிகின்று - ராவா
பகருடிப்பாடிப் படர்சடைக்குப்பல்பூப்
பகருடியேத்தார் பகர்ந்து. (௯௧)

பகருட்டம்பாட்டயரும் பாட்டோடாட்டெல்லி
பகருட்டம்பாழ்படுக்கு மூச்சி - பகருட்டந்
தாங்காருெழுதெழுவார் தாழ்சடையார்நம்முடைய
தாங்காருெழுத றலை. (௯௨)

தலையாலங்காட்டிற் பலிதிரிவரென்றுந்
தலையாலங்காடர்தா மென்னுந் - தலையாய
பாகீரதிவளரும் பல்சடையீர்வல்லிடையீர்
பாகீரதிவளரும் பண்டு. (௯௩)

பண்பாயநான்மறையான் சென்னிப்பலிதேர்ந்தான்
பண்பாயபைங்கொன்றைத் தாரருளான் - பண்பாற்
றிருமாலுமங்கைச் சிவற்கடிமைசெய்வான்
றிருமாலுமங்கைச் சிவன். (கச)

சிவன்மாட்டுகவெழுது நாணுநகுமென்னுஞ்
சிவன்மேயசெங்குன்றா ரென்னுஞ் - சிவன்மாட்டங்
காலிங்கனநினையு மாயிழையீரங்கொன்றை
யாலிங்கனநினையு மாறு. (கரு)

ஆறுவெங்கூற்றுதைத் தானைத்தோல்போர்த்துகந்தங்
காரூர்சடையீர்க் கமையாதே - யாறுத
வானினத்தார்தாந்த மணியிழையினார்க்கடிமை
யானினத்தார்தாந்தவிர்ந்த தாட்டு. (கசா)

ஆட்டுமரவ ரழிந்தாரெனும்பணிவா
ராட்டுமிடுபலிகொண் டாரமர - ராட்டுமோர்
போரேற்றான்கொன்றையான் போந்தான்பலிக்கென்று
போரேற்றான்போந்தான் புறம். (கஎ)

புறந்தாழ்குழலார் புற[illegible]சாதே
புறந்தாழ்புலிப்பொ[illegible]டி - புறந்தாழ்பொன் [யான்
மேற்றளிக்கோன்வெண்பிறையான் வெண்சுடர்போன்மேனி
மேற்றளிக்கோனென்னுளாயான் மெய். (கஅ)

மெய்யன்பகலாத வேதியன்வெண்புரிநூன்
மெய்யன்விரும்புவார்க் கெஞ்ஞான்றும் - வெய்ய
துணையகலாநோக்ககலா போற்றிகலாநெஞ்சே
துணையிகலாகூறுவா னூறு. (ககூ)

நூறுன்பயனுட்டின் னூறுமலர்சொரிந்து
நூறுநொடிவதனின் மிக்கதே - நூறு
வுடையான்பரித்தவெரி யுத்தமனைவெள்ளே
றுடையானைப்பாடலா லொன்று. (க00)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

பரணதேவநாயனார்

அருளிச்செய்த

# சிவபெருமான்றிருவந்தாதி.

---

ஒன்றுரைப்பீர்போலப் பலவுரைத்திட்டோயாதே
யொன்றுரைப்பீராயி னுறுதுணையா - மொன்றுரைத்துப்
பேரரவம்பூண்டு பெருந்தலையிலுண்டுழலும்
பேரரவம்பூணும் பிரான். (க)

பிரானிடபமால்பெரிய மந்தாரம்வில்லுப்
பிரானிடபம்பேரொலிநா ணாகம் - பிரானிடபம்
பேணுமுமைபெரிய புன்சடையின்மேலமர்ந்து
பேணுமுமையிடவம் பெற்று. (உ)

பெற்றும்பிறவி பிறந்திட்டொழியாதே
பெற்றும்பிறவி பிறந்தொழிமின் - பெற்றுங்
குழையணிந்தகோளரவக் [illegible]
குழையணிந்தகோளரவ நீ. (ங)

நீயேயாளாவாயு நின்மலற்குநன்னெஞ்சே
நீயேயாளாவாயு நீள்வாளி - னீயே
வேறூர்புனற்சடையா வெங்களிடைமருதா
வேறூர்புனற்சடையா வென்று. (ச)

என்றுமலர்தூவி யீசன்றிருநாம
மென்றுமலர்தூற்றி யேயிருந்து - மென்றும்

புகலூராபுண்ணியனே யென். (ரு)

என்னேயிவளுற்ற மாலென்கொலின்கொன்றை
யென்னேயிவளொற்றி யூரென்று - மென்னே
தவளப்பொடியணிந்த சங்கரனேயென்னுந்
தவளப்பொடியானைச் சார்ந்து. (சா)

சார்ந்துரைப்பதொன்றுண்டு சாவாமூவாப்பெருமை
சார்ந்துரைத்ததத்துவத்தி னுட்பொருளைச் - சார்ந்துரைத்த
வாதியேயம்பலவா வண்டத்தையாட்கொள்ளு
மாதியேயென்றென்பா லருள். (எ)

அருள்சேராதாரூர்தீ யாருமலெய்தா
யருள்சேராதாரூர்தீ யாடி - யருள்சேரப்
பிச்சையேற்றுண்டு பிறர்கடையிற்கரணிமிர்த்துப்
பிச்சையேற்றுண்டுழல்வாய் பேச்சு. (அ)

பேச்சுப்பெருகுவதென் பெண்ணணலியென்று
பேச்சுக்கடந்த பெருவெளியைப் - பேச்சுக்
குரையானையூனுக் குயிரானையொன்றற்
குரியானைநன்னெஞ்சே யுற்று. (கூ)

உற்றுரையாய்நன்னெஞ்சே யோதக்கடல்வண்ண
னுற்றுரையாவண்ணமொன் றுணை - யுற்றுரையா
யானையுரித்தானை யப்பனையெப்பொழுது
மானையுரித்தானை யடைந்து. (க0)

அடைந்துன்பாலன்பா யணிமணிகொண்டர்ச்சித்
தடைந்துன்பான்மேலுகுத்த மாணிக் - கடைந்துன்பா
லவ்வமுதமூட்டி யணிமலருஞ்சூழ்ந்தன்று
வவ்வமுதமாக்கினாய் காண். (கக)

காணாய்கவாலி கதிர்முடிமேற்கங்கைதனைக்
காணாயக்காருருவிற் சேருமையைக் - காணா
யுடைதலைகொண் டூரூர்திரிவானைநச்சி
யுடைதலைகொண்டூரூர் திரி. (கஉ)

திரியும்புரமெரித்த சேவகனார்செவ்வே
திரியும்புரமெரியச் செய்தார் - திரியு
மரியான்றிருக்கயிலை யென்றார்மேனி
யரியான்றிருக்கயிலை யாம். (கங)

ஆம்பரிசேசெய்தங் கழியாக்கை - யாம்பரிசே
யேத்தித்திரிந்தானை யெம்மானையம்மானை
யேத்தித்திரிந்தானை யேத்து. (௧௪)

ஏத்துற்றுப்பார்த்த னெழில்வாளடைவான்போ
லேத்துற்றுப்பார்த்த னிறைஞ்சுதலு - மேத்துற்றுப்
பாசுபதமன்றளித்த பாசூரான்பானிற்றுன்
பாசுபதமின்றளியென் பால். (௧௫)

பாலார்புனல்பாய் சடையானுக்கன்பாகிப்
பாலார்புனல்பாய் சடையானுள் - பாலாடி
யாடுவான்பைங்க ணரவூர்வான்மேனிதீ
யாடுவானென்றென்றே யாங்கு. (௧௬)

ஆங்குரைக்கலாம்பொன் மலர்ப்பாதமொன்றே
யாங்குரைக்கலாம்பொ னணிதில்லை - யாங்குரைத்த
வம்பலத்துமண்டத்து மப்பாலுமாய்நின்ற
வம்பரத்துமண்டத்து மாம். (௧௭)

மாயனையோர்பாக மமர்ந்தானைவானவரு
மாயவருமால்கடனஞ் சுண்டானை - மாய
வருவானைமாலை யொளியானைவானி
லுருவானையேத்தி யுணர். (௧௮)

உணராவளைகழலா வுற்றுன்பாற்சங்க
முணராவளைகழல வொட்டி - யுணரா
வளைந்தானமேனி யணியாரூரேசென்
றளைந்தானையாமாறு கண்டு. (௧௯)

கண்டிறந்துகாயெரியின் வீழ்ந்துகடிதோடிக்
கண்டிறந்துகாமன் பொடியாகக் - கண்டிறந்து
கானிலுகந்தாடுங் கருத்தர்க்குக்காட்டினேன்
கானிலுகந்தாடுங் கருத்து. (௨௰)

கருத்துடையவாதி கறைமிடற்றெம்மீசன்
கருத்துடையகங்காள வேடன் - கருத்துடைய
வானேற்றுனீற்று னனலாடியாமாத்து
ரானேற்றுனீற்று னெரி. (உக)

எரியாடியேகம்ப மென்னுதார்மேனி
யெரியாடியேகம்ப மாகு - மெரியாடி
யீமத்திடுங்காடு தேருமிறைபணிப்ப
வீமத்திடுங்காடு தான். (உஉ)

தானயன்மாலாகி நின்றுன்றனித்துலகிற்
றுனயன்மாலாய தன்மையான் - றுனக்
கரைப்படுத்தானுன்மறையைத் தண்புலித்தோலாடைக்
கரைப்படுத்தான்றன்பாதஞ் சார். (உங)

சாராவார்தாமுளரேற் சங்கரன்றன்மேனிமேற்
சாராவார்கங்கை யுமைநங்கை - சார்வா
யரவமதுசெஞ்சடைமே லக்கொன்றையொற்றி
யரவமதுசெஞ்சடையின் மேல். (உச)

மேலாயதேவர் [illegible]
மேலாயமின்றிவே றுண்பொழுதின் - மேலாய
மங்கையுமைவந் தடுத்திலளேவாணரு
மங்கையுமைவந் தடுத்து. (உரு)

அடுத்தபொன்னம்பலமே சார்வுமதனு
ளடுத்ததிருநட்ட மஃதே - யடுத்ததிரு
வானைக்காவாடுவது மேலென்புபூண்பதுவு
மானைக்காவான்ற னமைவு. (உசு)

அமைவும்பிறப்பு மிறப்புமாமற்றுங்
கமைவும்பரமான வாதி - யமையுந்
திருவாலவாய்சென்று சேராதுமாக்க
டிருவாலவாய்சென்று சேர். (உஎ)

சென்றுசெருப்புக்காலாற் செல்லமலர்நீக்கிச்
சென்றுதிருமுடிவாய் நீர்வார்த்துச் - சென்றுதன்
கண்ணிடந்தன்றப்பும் கருத்தற்குக்காட்டினான்
கண்ணிடந்தன்றப்பாமைப் பார்த்து. (௨அ)

பார்த்துப்பரியாதே பாணீறுபூசாதே
பார்த்துப்பரிந்தங்கம் பூணாதே - பார்த்திட்
டுடையானஞ்சோதாதே யூணுரைக்கைவிட்
டுடையானஞ்சோதாதா ரூண். (௨௯)

ஊணொன்றுமில்லை யுறக்கில்லையுன்மாலி
னூணொன்றுபேசவோர் சங்கிழந்தா - ளூணொன்றும்
விட்டானேவேள்வி துரந்தானேவெள்ளநீர்
விட்டானேபுன்சடைமேல் வேறு. (௩0)

வேறுரைப்பன்கேட்டருளும் வேதநான்காறங்கம்
வேறுரைத்தமேனி விரிசடையான் - வேறுரைத்த
பாதத்தாய்பைங்க ணரவூர்வாய்பாருரும்
பாதத்தாயென்னு மலர். (௩௧)

மலரணைந்துகொண்டு மகிழ்வாயுன்பாத
மலரணைந்துமானயன மாகு - மலரணைந்து
மன்சக்காம்வேண்ட வாளாவளித்தனையால்
வன்சக்கரம்பரனே வாய்த்து. (௩௨)

வாய்த்தவடியார் வணங்கமலரோன்மால்
வாய்த்தவடியுமுடி யுங்காணார் - வாய்த்த
சலந்தரனைக்கொன்றிட்டுச் சங்கரனென்றே
சலந்தரனாய்நின்றவா தாம். (௩௩)

தாமென்னநாமென்ன வேறில்லைதத்துறவிற்
றாமென்னைவேறாத் தனித்திருந்து - தாமென்
கழிப்பாலைசேருங் கறைமிடற்றாரென்றே
கழிப்பாலைசேருங் கடன். (௩௪)

கடனாகக்கைதொழுமின் கைதொழவல்லீரேற்
கடனாகைக்காரோண மேயார் - கடநாக
மாளவுரித்தாடுவார் நம்மேலவல்வினைநோய்
மாளவிரித்தாடுமால் வந்து. (௩௫)

வந்தார்வளைகழல்வார் வாடித்துகில்சோர்வார்
வந்தார்முலைமெலிவார் வார்குழல்கள் - வந்தார்
சுரிதருவாரைங்கொன்றைத் தாராரைக்கண்டு
சுரிதருவாரைங்கொன்றைத் தார். (௩௬)

தாரானெனினுஞ் சடைமுடியான்சங்கரனந்
தாரான்றசமுகனைத் தோணெரித்துத் - தாராய
நாளுங்கொடுத்தந்த வானவர்கடம்முன்னே
வாளுங்கொடுத்தான் மதித்து. (௩௭)

மதியாருஞ்செஞ்சடையான் வண்கொன்றைத்தாரான்
மதியாருமாலுடைய பாகன் - மதியாரு
மண்ணுமலைசேரா ராரோடுங்கூடாகி
யண்ணுமலைசேர்வ ரால். (௩௮)

ஆலநிழற்கீ ழிருப்பதுவுமாய்வதற
மாலமமுதுசெய்வ தாடுவதீ - யாலந்
துறையுடையானை யுரியுடையான்சோற்றுத்
துறையுடையான்சோராத சொல்லு. (௩௯)

சொல்லாயமின்றித் தொலைவின்றித்தூநெறிக்கட்
சொல்லாய்ப்பெருத்த சுடரொளியாய்ச் - சொல்லாய
வீரட்டத்தானை விரவார்புரமட்ட
வீரட்டத்தானை விரை. (௪0)

விரையாருமத்தம் விரகாகச்சூடி
விரையாரும்வெள்ளெலும்பு பூண்டு - விரையாரு
நஞ்சுண்டவாதி நலங்கழல்கள்சேராதார்
நஞ்சுண்டவாதி நலம். (௪௧)

நலம்பாயுமாக்க நலங்கொண்டலென்ற
னலம்பாயுமானன் குருவ - நலம்பாய்செய்
தார்த்தார்க்கு மண்ணுமலையானிடந்
தார்த்தார்க்குமண்ணு மலை. (சஉ)

மலையார்கலையோட வாரோடக்கொங்கை
மலையார்கலைபோய்மா லானண் - மலையார்
கலையுடையான்வானின் மதியுடையான்காவாத்
தலையுடையானென்றுதொழு தாள். (சங)

தாளார்கமல மலரோடுதண்மலருந்
தாளாரவேசொரிந்து தாமிருந்து - தாளார்
சிரமலையாய்சேமத் துணையேயென்றேத்துஞ்
சிரமலையார்சேமத்து ளார். (சச)

ஆர்துணையாவாங்கிருப்ப தம்பலவாவஞ்சவுமை
யார்துணையாவானை யுரிமூடி - யார்துணையாம்
பூவணத்தாய்பூதப் படையாளிபொங்கொளியாய்
பூவணத்தாயென்னின் புகல். (சரு)

புகலூருடையாய் பொறியரவம்பூணி
புகலூர்ப்புனற்சடையெம் பொன்னே - புகலூராய்
வெண்காடாவேலை விடமுண்டாய்வெள்ளேற்றாய்
வெண்காடாவென்பேனு நான். (சசு)

நானுடையமாடேயென் ஞானச்சுடர்விளக்கே
நானுடையகுன்றமே நான்மறையாய் - நானுடைய
காடுடையாய்காலங்க ளானாய்கனலாடுங்
காடுடையாய்காலமா னாய். (சஎ)

ஆயன்றமர ரழியாவகைசெய்தா
யாயன்றமர ரழியாமை - யாயன்
றிருத்தினன்செங்கண் விடையூர்வான்மேவி
திருத்தினன்சேதுக் கரை. (சஅ)

கரையேனுமாதர் கருவானசேருக்
கரையேனுமாது கரையாங் - கரையேனுங்
கோளிலியெம்மாதி குறிபரவவல்லேயே
கோளிலியெம்மாதி குறி. (சகூ)

குறியார்மணிமிடற்றுக் கோலஞ்சேர்ஞானக்
குறியாகிநின்ற குணமே - குறியாகு
மாலங்காடெய்தா வடைவேன்மேலாடரவ
மாலங்காடெய்தா வடை. (ருo)

அடையும்படைமழுவுஞ் சூலமிலம்பங்கி
யடையுமிறப்பறுப்ப தானு - லடைய
மறைக்காடுசேரு மணுளரென்பாற்சேரா
மறைக்காடுசேர்மக்க டாம். (ருக)

தாமேயவாறு சமயமுதற்பரமுந்
தாமேயவாறு தழைக்கின்றார் - தாமேற்
றழலுருவர்சங்கரவர் பொங்கரவம்பூண்ட
சழலுருவர்சங்கரரென் பார். (ருஉ)

பார்மேவுகின்ற பலருருவர்பண்டரங்கர்
பார்மேவுகின்ற படுதலையர் - பார்மேல்
வலஞ்சுழியைச்சேர்வர் மலரடிகள்சேர்வார்
வலஞ்சுழியைச்சேர்வாகு வார். (ருஙு)

வாரணிந்தகொங்கை யுமையாண்மணவாளா
வாரணிந்தகொன்றை மலர்சூடி - வாரணிந்த
செஞ்சடையாய்சீர்கொள் சிவலோகாசேயொளியாய்
செஞ்சடையாய்செல்ல நினை. (ருச)

நினைமால்கொண்டோடி நெறியானதேடி
நினைமாலேநெஞ்ச நினைய - நினைமால்கொண்
டேர்தேடியும்பரா லம்பரமாகாளாவென்
றார்தேடியென்றுரைப்பா னார். (ருரு)

ஊர்வதுவுமானே றுடைதலையிலுண்பதுவு
மூர்வதுவுமெல்லுரக மூடுவர்கோ - லூர்வதுவு
மேகம்பமென்று மிடைமருதைசேர்த்தார்க்
கேகம்பமாய்நின்ற வேறு. (௫௬)

ஏறேயவாண்முதலே யேகம்பாவெம்பெருமா
னேறேறியூரு மெரியாடி - யேறேய
வாதிவிடங்காகாறை யண்டத்தாயம்மானே
யாதிவிடங்காவுமைநன் மாட்டு. (௫௭)

மாட்டும்பொருளை யுருவைவருகாலம்
வாட்டும்பொருளாய் மறையானை - வாட்டு
முருவானைச்சோதி யுமைபங்காபங்கா
யுருவானசோதி யுரை. (௫௮)

உரையாவிருப்பதுவு முன்னையேயூனி
னுரையாயுயிராய்ப் பொலிந்தா - யுரையாய
வம்பொனேசோதி யணியாரூர்சேர்கின்ற
வம்பொனேசோதியே யாய்ந்து. (௫௯)

ஆய்ந்துன்றனபாத மடையவருமென்மே
லாய்ந்தென்றன்பாச மலமறுத் - தாய்ந்துன்றன்
பாலணையச்செய்த பரமாபரமேட்டி.
பாலணையச்செய்த பரம். (௬௦)

பரமாயபைங்கட் சிரமேயப்பூண்ட
பரமாயபைங்கட் சிரமே - பரமாய
வாறடைந்தசெஞ்சடையா யைந்தடைந்தமேனியா
யாறடைந்தசெஞ்சடையா யன்பு. (௬௧)

அன்பேயுடைய வரனேயணையாத
வன்பேயுடைய வனலாடி - யன்பே
கழுமலத்துளாடுங் கரியுரிபோர்த்தானே
கழுமலத்துளாடுங் கரி. (௬௨)

கரியார்தாஞ்சேருங் கலைமதிகைக்கொண்டே
கரியார்தாஞ்சேருங் கவாலி - கரியாகி
நின்றகழிப்பாலை சேரும்பிரானுமை
நின்றகழிப்பாலை சேர். (௬௩)

சேரும்பிரானுமஞ் சிந்திக்கவல்லீரேற்
சேரும்பிரானுமஞ் சிந்திக்கச் - சேரு
மலையான்மகளை மகிழ்ந்தாரூர்நின்றன்
மலையான்மகளை மகிழ்ந்து. (௬௪)

மகிழ்ந்தன்பர்மாகாளஞ் செய்யுமகளிர்
மகிழ்ந்தம்பரமாகி நின்றார் - மகிழ்ந்தங்க
மொன்றாகிநின்ற வுமைபங்கனெற்றியூ
ரொன்றாகிநின்ற வுமை. (௬௫)

உமைகங்கையென்றிருவ ருற்றவுணர்வு
முமைகங்கையென்றிருவர் காணு - ருமைகங்கை
கார்மிடற்றம்மேனிக் கதிர்முடியான்கண்மூன்று
கார்மிடற்றம்மேனிக் கினி. (௬௬)

இனியவாகாணீர்க ளிப்பிறவியெல்லா
மினியவாவாகாமை யற்று - மினியவா
முக்கைபலசெய்த வாமாத்தூரம்மானை
யாக்கைபலசெய்த வன்று. (௬௭)

அன்றமரருய்ய வயிர்தமவர்க்கருளி
யன்றவுணர்வீட வருள்செய்தோ - னன்றவுணர்
சேராமனின்ற வடிகளடியார்க்குச்
சேராமனின்ற சிவம். (௬௮)

சிவணந்தஞ்செல்கதிக்கோர் கண்சேர்வதாக்குஞ்
சிவணந்தஞ்செல்கதிக்கோர் கண்ணுஞ் - சிவணந்தஞ்
சேருமுருவுடையீர் செங்காட்டங்குடிமேற்
சேருமுருவுடையீர் செல். (௬௯)

செல்லுமளவுஞ் சிதையாமற்சிந்திமின்
செல்லுமளவுஞ் சிவனும்மைச் - செல்லுந்
திருமீச்சூர்க்கேறவே செங்கணேறூருந்
திருமீச்சூரீசன் றிறம். (௭௦)

திறமென்னுஞ்சிந்தை தெரிந்தும்மைக்காணுந்
திறமென்னுஞ்சிந்தைக்கு மாமே - திறமென்றுஞ்
சித்தத்தீர்செல்வத் திருக்கடவூர்சேர்கின்ற
சித்தத்தீரேசெல்லு நீர். (௭௧)

நீரேயொருதேறு நின்மலனாயிரு
நீரேநெடுவானி னின்றிரு - நீரே
நெருப்பாயதோற்றத்து நீளாறும்பூண்டு
நெருப்பாயதோற்ற நிலைத்த. (௭௨)

நிலைத்திவ்வுலகனைத்து நீரேயாய்நின்றீர்
நிலைத்திவ்வுலகனைத்து நீரே - நிலைத்தீரங்
கானப்பேரீர்கங்கை சூடினீர்கங்காளீர்
கானப்பேரீர்கங்கை யீர். (௭௩)

ஈரமுடைய விளமதியஞ்சூடினீ
ரீரமுடைய சடையினீ - ரீர
வருங்காலமாயினீ ரிவ்வுலகமெல்லாம்
வருங்காலமாயினீர் வாழ்வு. (௭௪)

வாழ்வார்மலரணைவார் வந்தவருநாகம்
வாழ்வார்மலரணைவார் வண்கங்கை - வாழ்வாய
தீயாடவானுள்வான் வான்கழல்கள்சேராதார்
தீயாடவானுறு மாறு. (௭௫)

மாருதவானையின்றோல்*போர்த்தவர்சடைமேல்
மாருதநீருடைய மாகாளர் - மாரு
விடுங்கையர்சேரு மெழிலவாய்முன்னே
விடுங்கையர்சேர்வாக வீ. (௭௬)

ஈயும்பொருளே யெமக்குச்சிவலோக
மீயும்பொருளே யிடுகாட்டி - னீயும்
படநாகம்பூணும் பரலோகரென்னீர்
படநாகம்பூணும் படி. (எஎ)

படியேறும்பார்த்துப் பரத்தோடுங்கூட்டிப்
படியேறும்பார்த்துப் பரனைப் - படியேனைப்
பாருடையாய்பைங்கண் புலியதளாய்பானீற்றாய்
பாருடையாயானுன் பரம். (எஅ)

பரமாயவிட்டுநின் பாதம்பணிந்தேன்
பரமாயவாதிப் பரனே - பரமாய
நீதியேநின்மலனே நேரார்புரமூன்று
நீதியேசெய்தாய் நினை. (எகூ)

நினையடைந்தேன்சித்த நிலையாகும்வண்ண
நினையடைந்தேன்சித்த நிமலா - நினையடைந்தேன்
கண்டத்தாய்காளத்தி யானேகனலாருங்
கண்டத்தாய்காவாலி கா. (அ௦)

காவார்பொழிற்கயிலை யாதீகருவேயெங்
காவாய்ப்பொலிந்த கடுவெளியே - காவாய
வேறுடையாயென்னை யிடைமருதிலேயென்று
மேறுடையாய்நீயே களி. (அக)

களியானுநான்முகனு மாய்நின்றகண்ணன்
களியாருங்கூற்றங் கனியே - களியாருங்
காடுடையாய்காலங்க ளானாய்கனலாடுங்
காடுடையாய்காலமா னாய். (அ௨)

ஆனாயனாய வடலேறேயாரூர்க்கோ
னானாயனாவமுத மேயானா - யானாய்
கவறெலும்போடேந்தி கதநாகம்பூணி
கவறெலும்புதார்கை வளை. (அ௩)

தீயானமேனியனே செம்பவளக்குன்றமே
தீயானசேராமற் செய்வானே - தீயான
செம்பொற்புரிசைத் திருவாரூராயென்னைச்
செம்பொற்சிவலோகஞ் சேர். (கூஅ)

சேர்கின்றசிந்தை சிதையாமற்செய்வானே
சேர்கின்றசிந்தை சிதையாமற் - சேர்கின்றே
மொற்றியூரானே யுறவாருமில்லையினி
யொற்றியூரானே யுறும். (கூகூ)

உறுமுந்தமுன்னே யுடையாமலின்ன
முறுமுந்தமுன்னே யுடையாம - லுறுமுந்த
மோரைந்துரைத்துற் றுணர்வோடிருந்தொன்றை
யோரைந்துரைக்கவல்லார்க் கொன்று. (௧00)

ஒன்றைப்பரண ருரைத்தவந்தாதிபல
வொன்றைப்பகரி லொருகோடி - யொன்றைத்
தவிராதுரைப்பார் தவிராருலகிற்
றவிரார்சிவலோகந் தான்.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

இளம்பெருமானடிகள்

அருளிச்செய்த

# சிவபெருமான்றிருமும்மணிக்கோவை.

---

## அகவல்.

முதல்வன்வகுத்த மதலைமாடத்
திடவரையூன்றிய கடவுட்பாண்டிற்
பள்ளிச்செம்புய லுள்விழுதுறீஇப்
புத்தேணிவந்த முத்தமாச்சுட
ரெறிவளியெடுப்பினுஞ் சிறுநடுக்குறுநின்
னடிநிழலளியவோ வைத்தமுடிமிசை
யிலங்குவளைத்தனிப் போதுவிரித்த
வலங்குகதிரொலியனி யணிந்ததென்மாறே. (க)

## வெண்பா.

மாறுதடுத்த மணிக்கங்கைதிங்களின்
கீறுதடுப்பக் கிடக்குமே — நீறடுத்த
செந்தாழ்வரையின் றிரள்போற்றிருமேனி
யெந்தாய்நின்சென்னி யிடை. (உ)

## கட்டளைக்கலித்துறை.

இடைதரில்யாமொன் றுணர்த்துவதுண்டிடையோர்சிமையத்
தடைதருமூரிமந்தாரம்விராய்நதிவெண்ணிலவின்
றுடைதருதுண்டங்கிடத்தினுந்தொண்டரொதுக்கியிட்ட
புடைதருபுல்லெருக்குஞ்செல்லுமோநின்புரிசடைக்கே. (ங)

## அகவல்.

சடையே, நீரகந்ததும்பி நெருப்புக்கலிக்குமே
மிடறே, நஞ்சகந்துவன்றி யமிர்துபிலிற்றுமே

வடிவே, முள்ளெயிறிலகவைஇத் தளிர்தயங்கும்மே
யடியே, மடங்கன்மதஞ்சீறி மலர்பழிக்கும்மே
யஃதான், றிணையவென்றறிகிலம் யாமேமுனைதவத்
தலைமூன்றுவகுத்த தனித்தாட்
கொலையூன்றுகுடுமி நெடுவேலோயே. (௪)

## வெண்பா.

வேலைமுகடும் விசும்பகடுங்கைகலந்த
வாலைநீரெங்கே கரந்தனையான் - மாலைப்
பிறைக்கீறுகண்ணுதலா பெண்பாகாவையோ
விறைக்கூறுயெங்கட் கிது. (௫)

## கட்டளைக்கலித்துறை.

இதுநீரொழிமினிடைதந்துமையிமையத்தரசி
புதுநீர்மணத்தும்புலியதளேயுடைபொங்குகங்கை
முதுநீர்கொழித்தவிளமணன்முன்றின்மென்சேரட்டதிங்கட்
செதுநீர்ததும்பத்திவளஞ்செய்செஞ்சடைத்திவண்ணமோ. (௬)

## அகவல்.

வண்ண, மைஞ்சுதலைகவைஇப் பவளமால்வரை
மஞ்சுமிவிலகிப் பகல்செருக்கும்மே
யென்னைப், பழமுடைச்சிறுகலத் திடுபலிபெய்மோ
ணெஞ்சகம்பிணிக்கும் வஞ்சமோவுடைத்தே
யஃதான்று, முனையெயிற்றுக்குருளை யின்றுயிலெடுப்ப
நடுங்குதலைச்சிறுநிலா விதிர்க்குங்கொடும்பிறைத்
தேமுறுமுதிர்ச்சடை யிறைவ
மாமுறுகொள்கை மாயமோவுடைத்தே. (௭)

## வெண்பா.

உடைதலையின்கோவை யொருவடமோகொங்கை
புடைமலிந்தவெள்ளெருக்கம் போதோ - சடைமுடிமேன்
முன்னநாள்பூத்த [illegible]
வின்னநாள்கண்ட திவள். (௮)

கட்டளைக்கலித்துறை.

இவளப்பனிமாலிமையத்தணங்குகற்றைச்சடைமே
லவளப்புத்தேளிருலகிற்கரசியதுகொண்டென்னை
யெவளுக்குநீநல்லதியாரைமுன்னெய்திற்றெற்றேயிதுகா
தவளப்பொடிச்செக்கர்மேனிமுக்கண்ணுடைச்சங்கரனே. (க)

அகவல்.

கரதலநுழைத்த மரகதக்கபாடத்
தயில்வழங்குகுடுமிக் கயிலைநாடநின்
னணங்குநுயிலெடுப்பிற் பிணங்குநிலாப்பிலையல்
யாமேகண்டது மிலமேதாமா
மூவாவெஃகமு முரணு
மோவாதுபயிற்று முலகமாலுளதே. (க0)

வெண்பா.

உளரொளியகங்கை யொலிதிரைகண்மோத
வளரொளிதேய்ந்துள்வளைந்த தொக்குங் - கிளரொளிய
பேதைக்கருங்கட் பிறைவின்மனுளனார்
கோதைப்பிறையின் கொழுந்து. (கக)

கட்டளைக்கலித்துறை.

கொழுந்திரட்டெண்ணிலவஞ்சிநின்கூரிருள்வார்பனிங்கின்
செழுந்திரட்குன்றகஞ்சென்றடைந்தாலொக்குந்தெவ்வர்நெஞ்
தழுந்திரட்கண்டத்தவளப்பொடிச்செக்கர்மேனிநின்ரு [சத்
ரெழுந்திரட்சோதிப்பிழம்பு மென்னுள்ளத்திடங்கொண்டவே.

அகவல்.

கொண்டற்காரெயிற்றுச் செம்மருப்பிருலின்
புண்படுசிமையத்துப் புலவுநாறுகுடுமி
வரையோன்மருக புனலாள்கொழுந
விளையோன்முதை முதுகாட்டுப்பொருநநின்
[illegible] பரவ
வெருங்குகவர்க்குமோ வீடுதருநெறியே. (கஉ)

### வெண்பா.

நெறிவிரவுகொன்றை நெடும்படற்கீழ்க்கங்கை
யெறிதிரைகளீர்த்தெற்ற வேறிப் - பொறிபிதிர
வீற்றராக்கண்படுக்கு மிண்டைச்சடைச்செங்க
ணேற்றராற் றீருமிடர். (சுஅ)

### கட்டளைக்கலித்துறை.

இடர்தருதீவினைக்கெள்கினைவார்க்குநின்னீரடியின்
புடைதருதாமரைப்போதுகொலாஞ்சரண்போழருவிப்
படர்தருகொம்பைப்பவளவண்ணபருமாமுறையுங்
கடைதருசெஞ்சுடர்க்கற்றையொக்குஞ்சடையந்தனையே. (சுகூ)

### அகவல்.

அந்தணாளர் செந்தொடையொழுக்கமு
மடலோர்பயிற்றுநின் சுடர்மொழியாண்மையு
மவுணர்நன்னாட் டிறைவனாகிக்
குறுநெடுந்தானை பரப்பித்தறுகண்
மால்விடையடரத் தாணிமிர்ந்துக்க
காய்சினவரவுநாண் பற்றிதீயோர்
நெடுவரைநெளிய வாங்கிச்
சுடுகணையெரிநிமிர்த்துத் துரந்தனான்றே. (எ0)

### வெண்பா.

ஞான்றபுனமாலை தோளலைப்பநாண்மதிய
மீன்றங்கலவோடு மிவ்வருவான் - மூன்றியங்கு
மூதூர்வியன்மாட முன்னொருகாற்றுன்னருந்தீ
மீதூரக்கண்சிவந்த வேந்து. (எக)

### கட்டளைக்கலித்துறை.

வேந்துக்கமாக்கடற்சூரன்முன்னாள்படவென்றிகொண்ட
சேந்தற்குத்தாதையிவ்வையமளந்ததெய்வத்திகிரி
யேந்தற்குமைத்துனத்தோழரின்றேன்மொழிவள்ளியென்னுங்
கூந்தற்கொடிச்சிதன்மாமன்வெம்மால்விடைக்கொற்றவனே.

## அகவல்.

கொற்றத் துப்பி லொற்றையீன்ற
சுணங்கையஞ்செல்வத் தணங்குதருமுதுகாட்டுப்
பேய்முதிராயத்துப் பிணவின்கொழுநநின்
றோர்கழல்கவைஇ யிலங்கிதழ்த்தாமந்
தவழ்தருபுனறலைப் படுந
ரவலமாக்கட லழுந்தலோவிலரே. (கக)

## வெண்பா.

இலர்கொலாமென்றிளைஞ ரேசப்பலிக்கென்
றுலகெலாஞ்சென்றுழல்வ ரேனு - மலர்குலாந்
திங்கட்குறுந்தெரியற் றேவர்க்காட்செய்வதே
யெங்கட்குறுந்தெரியி னீண்டு. (உ0)

## கட்டளைக்கலித்துறை.

ஈண்டுமுற்றத்தொற்றைமால்விடையேறியையம்முணைநாள்
வேண்டிமுற்றத்திரிந்தெங்கும்பெறுதுவெறுங்கைவந்தார்
பூண்டவொற்றைச்செங்கணரமுங்கற்றைச்சடைப்புனலு
நீண்டவொற்றைப்பிறைக்கீளுமெப்போதுமென்னெஞ்சத்தவே

## அகவல்.

நெஞ்சிற்கொண்ட வஞ்சமோவுடைத்தே
மடவோர்விரும்புநின் விளையாட்டியல்போ
மருள்புரிகொள்கைநின் றெருளாமையோ
யாதாகியதோ வெந்தைநீதியென்
றுடைதலைநெடுநிலா வெறியல்
கடைதலென்றருளி சூடியபொருளே. (உஉ)

## வெண்பா.

பொருளாகயானிரந்தாற் புல்லெருக்கின்போது
மருளான்மற்றல்லாதார் வேண்டிற் - றெருளாத
பான்மருமான்மறிக்கைப் பைங்கட்பகடுரியான்
றன்மருன்பைங்கொன்றைத் தார். (உங)

## கட்டளைக்கலித்துறை.

தாரிளங்கொன்றைநல்லேறுகடாவித்தலைமேவித்த
வேரிளமென்முலைப்பொன்மலையாட்டிக்கெற்றேயிவரோ
பேரிளங்கொங்கைப்பிணைவொடுங்கூடிப்பிறைக்கொழுந்தி
னேரிளந்துண்டஞ்சுமந்தையம்வேண்டியுழிதருமே. (உ௫)

## அகவல்.

உழிதரன்மடிந்து கழுதுகண்படுக்கு
மிடருறுமுதுகாட்டுச் சிரியல்பெரும்
புகர்முகத்துளைக்கை யுரவோன்றுறை
நெடியோன்பாகநின் சுடர்மொழியாண்மை
பயிற்றுநாவலர்க்
கிடர்தருதீவினை கெடுத்தலோவெளிதே. (உ௬)

## வெண்பா.

எளியமென்றெள்ளி யிகழாதுநாளு
மளியமாட்செய்தானு மையோ - தெளிவரிய
வள்கயிலைநின்பொருப்ப வான்றோய்மதிச்சடையாய்
கொள்கையிலையெம்மாற் குறை. (உ௭)

## கட்டளைக்கலித்துறை.

குறையாப்பலியிவைகொள்கவென்சொல்லிவையுங்கலையுங்கவிற்
றிறையாக்கொண்டாயினிச்செய்வதென்றெய் வல்களைப்புன
பொறையாயொருகடனுஞ்சண்டகண்டாபொடியணிந்த
விறையாவிடுபிணக்காடசெம்மேனியெம்மேறியனே. (உ௮)

## அகவல்.

வேதியர்பெரும விண்ணோர்தலைவ
வாதிநான்முகத் தண்டவாண
செக்கர்நான்மறைப் புத்தேளுடை
காய்சினமழவிடைப் பாகநின்
மூவிலைநெடுவேல் பாடுநா
நாவலம்பெருமை நல்குவோயெனவே. (உ௯)

## வெண்பா.

எனவேயுலகெலா மென்றிளைஞரேச
நனவேபலிதிரிதி நாளுஞ் - சினவேங்கைக்
கார்க்கயிலைநாட களிற்றிருரியலாற்
போர்க்கையிலைபேசனீ பொய். (உக)

## கட்டளைக்கலித்துறை.

பொய்நீருரைசெய்தீர்பொய்யோம்பலியெனப்போனபின்னை
யிந்நீள்கடைக்கென்றுவந்தறியீரினிச்செய்வதென்னே
செந்நீர்வளர்சடைத்திங்கட்பிளவொடுகங்கைவைத்த
மந்நீர்ப்பவளத்திரட்செக்கரொக்குமுதலவனே. (ந௦)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

அ தி ரா வ டி க ள்

அருளிச்செய்த

# மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை.

---

அகவல்.

ஒருநெடுங்கங்கை யிருங்குறும்பைம்புகர்
மும்முகச்செந்துதி நாலிணர்வெண்ணிணக்
குடற்புலவுகமழு மடற்கழூப்படையவன்
மதலைமாமதந் தூவன்றியகதனுடைக்
கடதடக்கபோலத் தோரிடமருப்பிற்
கரண்டகவுதரத்து முரண்டருகுறுமவிதன்
சேவடியுகள மல்ல
தியாவையுமிலமினி யிருநிலத்திடையே. (க)

வெண்பா.

நிலந்துளங்கமேருத் துளங்கநெடுமான்
றலந்துளங்கச்சப்பாணி கொட்டும் - கலந்துளங்கொள்
காமாரியீன்ற கருங்கைக்கடாத்த
மாமாரியீன்ற மணி. (உ)

கட்டளைக்கலித்துறை.

மணிசிந்துகங்கைதன் மானக்குருளையவானரக்க
ரணிசிந்தவென்றவெம்மையர்க்கிளங்கன்றையரும்பின்
றணிசிந்தவாய்ப்பெய்தபோதகத்தைத் தொடர்ந்தோர்பிறவிப்
பிணிசிந்துகார்முளையைப்பிடித்தோர்க்கில்லைபேதுறவே. (ந)

அகவல்.

பேதுறுதகைய மல்லதுதிறச்
செக்கர்க்குஞ்சிக் கருநிறத்தொக்கனைப்பன்

புக்கவணிரும்பொறித் தடக்கையு
முரணிய பெருந்தோட்
கொட்டநாவி தேவிதன்
மட்டுருதெரிய லடிமணந்தனமே. (௪)

வெண்பா.

மேயவுருமிடற்றர் வெள்ளெயிற்றர் திண்சேனை
யோயமணியூச லாடின்றே - பாய
மழைசெவிக்காற்றுந்திய வாளமர்க்கணெந்தை
தழைசெவிக்காற்றுந்தத் தளர்ந்து. (௫)

கட்டளைக்கலித்துறை.

உந்தத்தளராவளைத்தனமுன்னமின்னேடைநெற்றிச்
சந்தத்தளராவொருதனித்தெவ்வர்தந்தாளிரியூர்
விந்தத்தளராமருங்கிற்கிளிபெற்றவேழக்கன்றின்
மந்தத்தளராமலர்ச்சரணங்கள்வழுத்துமின்னே. (௬)

அகவல்.

மின்னெடுங்கொண்ட லந்நெடுமுழக்கத்
தோவறவிளங்கிய துளைக்கைக்கடவுளை
யாமிகவழுத்துவ தெவனோவவனேற்
பிறந்ததிவ்வுலகின் பெருமூதாதை
யுரந்தருசிரமரிந் தவற்கேவரைந்தது
மேருச்சிமையத்து மீமிசை
வாரிச்செல்வன் மகண்மகன்மொழியே. (௭)

வெண்பா.

மொழியின்மறைமுதலே முன்னயனத்தேறே
கழியவருபொருளே கண்ணே - தெழிய
கலாலயனேயெங்கள் கணபதியேநின்னை
யலாதையனேறுமாதென் னன்பு. (௮)

கட்டளைக்கலித்துறை.

அன்புதவச்சுற்றகாரமல்கொண்டெயின்மூன்றெரிய
வன்புதவந்துந்தைமாட்டுகின்முன்மதஞ்சூழ்மருப்பிற்
கன்புதவக்கரத்தாளமிட்டோடிக்கடுநடையிட்
டின்புதவச்சென்றுநீயன்றுகாத்ததியம்புகவே. (௯)

அகவல்.

கவவுமணிக்கேடகக் கங்கணக்கவைவளு
வறைகழலவுணரொடு பொருதனுான்றுநீற்
புழைக்கரமுயிர்த்த வழற்பேருறை
விரைநனி கிறிமூரி
யஞ்சேறுபுலர்த்து மென்பர்
மஞ்சேறுகயிலை மலைகிழவோயே. (கo)

வெண்பா.

மலைசூழ்ந்திழிகின்ற மாசுணைப்பொற்பாறை
தலைசூழ்ந்துதானிணைப்ப தொக்கும் – கலைசூழ்
திரண்டகங்கொள்பேரறிவன் றிண்வயிற்றினும்பர்க்
கரண்டகங்கொள்காலுயிர்க்குங் கை. (கக)

கட்டளைக்கலித்துறை.

காலதுகையதுகண்ணதுநியதுகார்மதநீர்
மேலதுகீழதுநூலதுவெற்பதுபொற்பமைநீம்
பாலதுதேனதுதானதுமென்மொழிப்பாவைமுப்பூண்
வேலதுவாளதுநான்மறைக்கின்றவிடுசுடர்க்கே. (கஉ)

அகவல்.

சுடர்ப்பிழம்புநுழைந்த வழற்றனிநெடுவேற்
செய்மூவுலகம் வலம்வரவேய
கொன்றையம்படலத் துன்றுசடைக்கடிந்த
வோங்கிருந்தாதையை வளாய்மாங்கனி
யள்ளற்றீஞ்சுவை யருந்திய
வள்ளற்கிங்கென் மனங்கனிந்திடுமே. (கங)

வெண்பா.

இக்க[illegible]ழேழ்நடவரைக
டிக்கயங்கள்பேர்ந்தாடச் செங்கீரை – புக்கியங்கு
தேனுடவண்டாடச் செங்கீரையாடின்றே
வானுடன்பெற்ற வரை. (கச)

கட்டளைக்கலித்துறை.

பெற்றமென்மொழிசிலம்பின்மகள்பெறப்பிச்சுகந்த
மற்றவள்பிச்சன்மயங்கன்முன்னோன்பின்னிணைமைமிகக்
கற்றவனையன்புறங்காட்டிடைநடமாட்டுகந்தோ
செற்றவெண்டந்தத்தவனம்மையாட்கொண்டுசெய்தனவே. ()

அகவல்.

செய்தருபொலம்படை மொய்தருபரூஉக்
குருளை, வெள்ளெயிறுபொதிந்த வள்ளுகிர்த்திரள்வாய்ப்
பெருந்திரட் புழைக்கை
மண்முழைவழங்குந் திண்முரணேற்றின்
பணையடர்ப்பாகன் றனதிணையடி
நெடும்பொற்சரண மேத்த
விடும்பைப்பௌவ மினிநீங்கலமே. (க௬)

வெண்பா.

அலங்கன்மணிகனக மூந்தியருவி
விலங்கன்மிசையிழிவ தொக்கும் - பலன்கனிக
ளுண்டளைந்தகோன்மகுடத் தொண்கடுக்கைத்தாதளைந்து
வண்டணைந்துசோரு மதம். (கஎ)

கட்டளைக்கலித்துறை.

மதந்தந்தமென்மொழிமாமலையாட்டிமடங்கல்கொன்ற
மதந்தந்தமுக்கண்ணரற்குமுன்னீன்றவம்மாமலைபோன்
மதந்தந்தகும்பக்குழவிமந்தாரப்பொன்னாட்டிருந்து
மதந்தந்தசெம்மலன்றேவையமுய்யவளர்கின்றதே. (க௮)

அகவல்.

வளர்தருகவட்டின் கிளரொளிக்கற்பகப்
பொதும்பர்த்தும்பி யொழிகின்றேச்சும்
பாரிடைக்குறுநடைத் தோடிஞாங்க
ரிட்ட மாங்கனி
முழுவதும்விழுங்கிய முளைப்பணைத்தடக்கை
யெந்தையல்லதுமற் றியாவுள
சிந்தைசெய்யுந் தேவதைநமக்கே. (க௯)

### வெண்பா.

கேளுற்றியான்றளர வொட்டுமேகிம்புரிப்பூண்
வாளுற்றகேயூர வாளரக்கர் - தோளுற்
றறித்தெறிந்துகொன்றழித்த வங்கயங்கண்டீண்டே
யிறுத்தெறிந்துகொன்றழித்த வேழ. (உ0)

### கட்டளைக்கலித்துறை.

ஏறுதழீஇயவெம்புத்தேண்மருகவெங்குந்தவள
நீறுதழீஇயவெண்டோளவன்செல்வவண்டுண்ணைநெக்க
வாறுதழீஇயகாதலத்தையநின்றன்னையல்லால்
வேறுதழீஇத்தொழுமோவணங்காதவியன்சிரமே. (உக)

### அகவல்.

சிரமே, விசும்புபோதவுயரியிரண் டசும்புபொழியும்மே
கரமே, வரைத்திரண்முரணிய விரைத்தவிழும்மே
புயமே, திசைவிளிம்புகிழியச் சென்றுசெறிக்கும்மே
யடியே, யிடுந்தொறுமிடுந்தொறுமிவ்வுல கம்பெயரும்மே
யாயினு, மஞ்சுடர்ப்பிழம்பு தழீஇ
நெஞ்சகத்தொடுங்குமோ நெடும்பணைக்குரே. (உஉ)

### வெண்பா.

சூர்தந்தபொற்குவட்டின் சூளிகையின்வானயிர்த்து
வார்தந்தெழுமதிய மன்னுமே - சீர்தந்த
மாமதலைவான்மதியங் கொம்புவயிறுதித்த
கோமதலைவாண்மதியங் கொம்பு. (உங)

(உச) (உரு) (உசா) (உஎ) (உஅ) (உகூ) (ங0)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

# கோயினான்மணிமாலை.

வெண்பா.

பூமேலயனறியா மோலிப்புறத்ததே
நாமேபுகழ்ந் தளவை நாட்டுவோம் - பாமேவு
மேத்துகந்தான் றில்லை யிடத்துகந்தானம்பலத்தே
கூத்துகந்தான் கொற்றக் குடை. (க)

கட்டளைக்கலித்துறை.

குடைகொண்டிவ் வையமெலாங்குளிர்வித் தெரிபொற்றி கிரீப், படைகொண் டிகறெரும்பார்த்திவராவதிற் பைம்பொற்கொன்றைத், தொடைகொண்டவார்சடையம்பலத்தான்றொண்டர்க்கேவல்செய்து, கடைகொண்டபிச்சைகொண்டுண்டிங்குவாழ்தல்களிப்புடைத்தே. (உ)

ஆசிரியவிருத்தம்.

களிவந்தமுதூறிக் கன்மனத்தையெல்லாங்
   கசியும்படிசெய்து கண்டறிவாரில்லா
வெளிவந்தடியேன் மனம்புகுந்ததென்றால்
   விரிசடையும்வெண்ணீறுஞ் செவ்வானமென்ன
வொளிவந்தபொன்னிறமுந் தொன்னடமுங்காட்டு
   முடையானுயர்தில்லை யம்பலமொன்றல்லா
லெளிவந்தினிப்பிறர்பாற் சென்றவர்க்குப்போய்கொண்
   டிடைமிடைந்தபுன்மொழியா லிச்சையுரையோமே. (ந)

## இணைக்குறளாசிரியப்பா.

உரையின் வரையும் பொருளினளவு
மிருவகைப்பட்ட வெல்லையுங்கடந்து
தம்மைமறந்து நின்னைநினைப்பவர்
செம்மைமனத்தினுந் தில்லைமன்றினுட
மாடிமம்பல வாணநீடு
குன்றக்கோமான் றன்றிருப்பாவையை
நீலமேனி மாதிருத்தங்கையைத்
திருமணம்புணர்ந்த ஞான்றுபெருமகின்
றுதவிழ்கொன்றைத் தாருமேதமில்
வீரவெள்விடைக் கொடியும்போரிற்
றழங்குந்மருகப் பறையுமுழங்கொலித்
தெய்வக்கங்கை யாறும்பொய்தீர்
விரையாக்கலியெனு மாணையுநிரைநிரை
யாயிரம்வகுத்த மாயிருமருப்பின்
வெண்ணிறச்செங்கண் வேழமும்பண்ணியல்
வைதிகப்புரவியும் வானநாடு
மையறுகனக மேருமால்வரையுஞ்
செய்வயற்றில்லை யாகியதொல்பெரும் பதியுமென்
றொருபதினாயிரந் திருநெடுநாமமு
முரிமையிற்பாடித் திருமணப்பந்தரு
ளமரர்முன்புகுந் தறுகுசாத்திமின்
றமர்பெயரெழுதிய வரிநெடும்புத்தகத்
தென்னையுமெழுத வேண்டுவனின்னரு
ளாணைவைப்பிற் காணுநவனும்
வானுறநிமிர்ந்து காட்டுங்
கானில்வானுளம்புங் கருடனுதலினே. (௩)

## வெண்பா.

ஆதரித்தமாலு மறிந்திலனென்றஃதறிந்தே
கா[illegible] காட்டுமே - போதகத்தோற்
கம்பலத்தானீனுக கங்கணத்தான்றென்புலியூ
ரம்பலத்தான்செம்பொ னடி. (௪)

## கட்டளைக்கலித்துறை.

அடியொன்றுபாதலமேழிற்குமப்புறம்பட்டதிப்பான், மு
டியொன்றிவ்வண்டங்களெல்லாங்கடந்ததுமுற்றும்வெள்ளைப்
பொடியொன்றுதோளெட்டுத் திக்கின்புறத்தனபூங்கரும்பின்
செடியொன்றுதில்லைச்சிற்றம்பலத்தான்றன் றிருநடமே. (௬)

## ஆசிரியவிருத்தம்.

நடமாடியேழுலகு முய்யக்கொண்ட
நாயகரேநான்மறையோர் தங்களோடுந்
திடமாடம்திற்றில்லைக் கோயில்கொண்ட
செல்வரேயுமதருமை தேராவிட்டீ
ரிடமாடியிருந்தவளும் விலக்காவிட்டா
லென்போல்வார்க்குடனிற்க வியல்வதன்று
தடமாலைமுடிசாய்த்துப் பணிந்தவானோர்
தஞ்சுண்டாவங்கருநீர் நஞ்சுண்டீரே. (எ)

## நேரிசையாசிரியப்பா.

நஞ்சுமிழ்பகுவாய் வெஞ்சினமாசுணந்
தன்முதன்முருக்க வென்முதற்சூழ்ந்த
நீர்ச்சிறுபாம்புதன் வாய்க்கெதிர்வந்த
தேரையைவவ்வி யாங்கியான்முன்
கருவிடைவந்த வொருநாட்டொடங்கி
மறவாமறலி முறைபிறழ்பேழ்வா
யயிற்றலையன்ன வெயிற்றிடைக்கிடந்தாங்
கருணனியின்றி யொருவயிறோம்பற்குப்
பல்லுயிர்செகுத்து வல்லிதினருந்தி
யயர்த்தனனிருந்தும் போலும்பெயர்த்துநின்
றெண்டோள்வீசிக் கண்டோருருகத்
தொல்லெயிலுடுத்த தில்லைமூதூ
ராடுமம்பலக் கூத்தனைப்
பாடுதல்பரவுதல் பணிதலோவிலமே. (அ)

வெண்பா.

இலவிதழ்வாய்வீழ்வா ரிகழ்வாரவர்தங்
கலவிகடைக்கணித்துங் காணே - னிலவுமொளி
யாடகஞ்சேரம்பலத்தே யாளுடையார்நின்றாடு
நாடகங்கண்டன்பான நான். (க)

கட்டளைக்கலித்துறை.

நானேபிறந்துபயன்படைத்தேனயனாரணனெங்
கோனேயெனத்தில்லையம்பலத்தேநின்றுகூத்துகந்த
தேனேதிருவுள்ளமாகியென்றீமையெல்லாமறுத்துத்
தானேபுகுந்தடியேன்மனத்தேவந்துசந்திக்கவே. (க0)

ஆசிரியவிருத்தம்.

சந்துபுனைய வெதும்பிமலரணை
தங்கவெருவி யிலங்குகலையொடு
சங்குகழல நிறைந்தவயலவர்
தஞ்சொலனைய மொழிந்துகிளியொடு
பந்துகழல்கண் மறந்துதளிர்புரை
பண்டமிறமு மிழந்துநிறையொடு
பண்புதவிர வணங்கனவரொடு
நண்புபெருக விளைந்தவினையன
நந்திமுழவு திறங்கமலைபொரு
நங்கைமகிழ வணிந்தவரவுக
ணஞ்சுபிறழிய மூன்றுமுழுவலக
னொந்துநரல வலைந்தபகிரதி
யந்திமதியொ டணிந்துதிலைநக
ரம்பொனணியு மரங்கினடநவி
லங்கணரசை யடைந்துதொழுதிவ
ளன்றுமுதலைநி னின்றுவரையுமே. (கக)

நிலைமண்டலவாசிரியப்பா.

வரையொன்றுநிறுவி யரவொன்றுபிணித்துக்
கடறடவாக மிடலொடும்வாங்கித்
திண்டோளாண்ட தண்டாவமரர்க்
கமிர்துணவளித்த முதுபெருங்கடவுள்

கடையுகஞ்சென்ற காலத்துநெடுநில
மாழிப்பீரப்பி லாழ்வதுபொரூஅ
தஞ்சேலென்று செஞ்சேலாகித்தன்
றெய்வவுதரத்துச் சிறுசெலுப்புரையிற்
பௌவமேழே பட்டதுபௌவத்தோ
நிலகுருதுழைத் தொருநாளுண்டது.
மூலகமூன்று மளந்தாழியாங்கவ
ணீரடிநிரம்பிற்று மிலவேதேரி
லுரைப்போர்க்கல்ல தவன்குறைவின்றே
யினையனாகிய தனிமுதல்வானவன்
கேழற்றிருவுரு வாகியாழத்
தடுக்கியவேழு மெடுத்தனனெடுத்தெடுத்
தாழியூழி கீழுறக்கிளைந்துங்
காண்பதற்கரியநின் கழலும்வேண்டுபு
நிகிலலோகமு நெடுமறைத்தொகுதியு
மகிலசராசர மனைத்துமுதவிய
பொன்னிறக்கடவு ளன்னமாகிக்
காண்டிலாதநின் கதிர்நெடுமுடியு
மீங்கிவைகொண்டு நீங்காதுவிரும்பிச்
சிறியபொதுவின் மறுவின்றிவிளங்கி
யேவருங்காண வாடுதியதுவௌக்
கதிசயம்விளைக்கு மன்றேயதிசயம்
விளையாதுமொழிந்த தெந்தைவளையாது
கல்லினும்வலிதது நல்லிதிற்செல்லாது
தான்சிறிதாயினு முள்ளிடைநிரம்ப
வான்பொயச்ச மாயாவாகை
மிடைந்தனகிடப்ப விடம்பெறலருமையி
லைவர்கள்வர் வல்லிதிற்புகுந்து
மண்மகன்றிகிரியி லெண்மடங்குசுழற்ற
வாடுபுகிடந்த பீடினெஞ்சத்து
நுழைந்தனைபுகுந்து தழைந்தநின்சடையுஞ்
செய்யவாயு மையமார்கண்டமு

நெற்றியிற்றிகழ்ந்த வொற்றைநாட்டமு
மெடுத்தபாதமுந் தடுத்தசெங்கையும்
புள்ளியாடையு மொள்ளிதின்விளங்க
நாடகமாடுதி நம்பகூடும்
வேதநான்கும் விழுப்பெருமுனிவரு
மாதிநின்றிற மாதலின்மொழிவது
பெரியதிற்பெரியை யென்றுமன்றே
சிறியதிற்சிறியை யென்றுமன்றே
நிறைபொருண்மறைக ணான்குநின்னறைகழ
லிரண்டொடுமறிவினி லார்த்துவைத்த
மறையவர்தில்லை மன்றுகிழவோனே. (கஉ)

வெண்பா.

கிழவருமாய்நோய்மூப்புக் கீழ்ப்பட்டுக்காமத்
துழவரும்போயோயுமா கண்டோ - மொழிதெரிய
வாயினாலிப்போதே மன்றினடமாடு
நாயனாரென்றுரைப்போ நாம். (கங.)

கட்டளைக்கலித்துறை.

நாமத்தினாலென்றனாத்திருத்தேனறைமாமலர்சேர்
தாமத்தினாலுன்சரணபணியேன்சார்வதென்கொலோநான்
வாமத்திலேயொருமானைத்தரித்தொருமானைவைத்தாய்
சேமத்தினாலுன்றிருத்தில்லைசேர்வதொர்செந்நெறியே. (கச)

ஆசிரியவிருத்தம்.

நெறிதருகுழலை யறலென்பர்க
ணிழலெழுமதிய நுதலென்பர்க
ணிலவினும்வெளிது நகையென்பர்க
ணிறம்வருகலச முலையென்பர்க
ளறிகுவதரிது இடையென்பர்க
ளடியிணைகமல மலரென்பர்க
ளவயவமினைய மடமங்கைய
ரழிபொருணமையு மவரென்செய

மதிமழுவுடைய கரனென்கிலர்
 மறலியையுமுனியு மரனென்கிலர்
 மதிபொதிசடில தரனென்கிலர்
 மலைமகண்மருவு புயனென்கிலர்
செறிபொழினிலவு தில்லையென்கிலர்
 திருநடநவிலு மிறையென்கிலர்
 சிவகதியருளு மரசென்கிலர்
 சிலர்நரகுறுவ ரறிவின்றியே. (கரு)

நேரிசையாசிரியப்பா.

அறிவிலொழுக்கமும் பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையு மிடும்பையீட்டமு
மினையனபலசரக் கேற்றிவினையெனுந்
தொன்மீகாம னுய்ப்பவந்நிலைக்
கருவெனுநெடுநக ரொருதுறைநீத்தத்துப்
புலனெனுங்கோண்மீ னலமந்துதொடரப்
பிறப்பெனும்பெருங்கட லுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திரையுவட்டிற் பெயர்ப்பிடமயர்த்துக்
குடும்பமென்னு நெடுங்கல்வீழ்த்து
நிறையெனுங்கூம்பு முரிந்துகுறைபா
வுணர்வெனுநெடும்பாய் கிறிப்புணரு
மாயப்பெயர்ப்படு காயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழா முன்னமலங்கன்
மதியுடனணிந்த பொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்த தெய்வநாயக
தொல்லெயிலுடுத்த தில்லைகாவல
வம்பலர்தும்பை யம்பலவாணநின்
னருளெனு நலத்தார்பூட்டித்
திருவடிநெடுங்கரை சேர்த்துமாசெய்யே. (கசு)

வெண்பா.

செய்யதிருமேனிச் சிற்றம்பலவருக்கென்
றையல்வளைகொடுத்தல் சாலுமே - யையன்றோர்
சேயேவருமளவிற் சிந்தாதமாத்திரமே
தாயேநமதுகையிற் சங்கு. (கஎ)

### கட்டளைக்கலித்துறை.

சங்கிடத்தானிடத்தான்றனதாகச்சமைந்தொருத்தி
யங்கிடத்தாடில்லையம்பலக்கூத்தற்கவிர்சடைமேற்
கொங்கிடத்தார்மலர்க்கொன்றையென்றுரெங்கைநீயுமொரு
பங்கிடத்தான்வல்லையேலில்லையேயுன்பசப்பொழியே. (க௰)

### ஆசிரியவிருத்தம்.

ஒழிந்ததெங்களுற வென்கொலோவெரியி
லொன்னலார்கள்புர மூன்றெரிந்தநாள்
விழுந்தெரிந்துதுக ளாகவென்றிசெய்த
தில்லைதில்லைநகர் போலியார்
சுழிந்தவுந்தியி லெழுந்திமேகலை
தொடக்கநின்றவர் நடக்கநொந்
தழிந்தசிந்தையினும் வந்ததாகிலுமொர்
சிந்தையாயொழிவ தல்லவே. (கக)

### நேரிசையாசிரியப்பா.

அல்லல்வாழ்க்கை வல்லிதிற்செலுத்தற்குக்
கைத்தேருழந்து கார்வருமென்று
வித்துவிதைத்தும் விண்பார்த்திருந்துங்
கிளையுடன்றவிரப் பொருளுடன்கொண்டு
மூளைமுதிர்பருவத்துப் பதியெனவழங்கிய
மருளாவயவ ரம்பிடைநடந்து
திருவுறுபவ்வந் தெந்திரங்கடாஅய்த்
தான்றுதிரைப்பரப்பிற் குன்றுபார்த்தியங்கியு
மாற்றல்வேந்தற்குச் சோற்றுக்கடன்பூண்டு
தாளுழந்தோடியும் வாளுழந்துண்டு
மறியாவொருவனைச் செறிவந்தெருட்டியுஞ்
சொற்பலபுனைந்துங் கற்றனகழறியுங்
குடும்பப்பாச நெடுந்தொடர்ப்பூட்டி
யையவரைந்திடத் தீர்ப்பநொய்திற்

பிறந்தாங்கிறந்து மிறந்தாங்குபிறந்துங்
கணத்திடைத்தோன்றிக் கணத்திடைக்கரக்குங்
கொப்புட்செய்கை யொப்பின்மின்போ
லுலப்பில்யோனிக் கலக்கத்துமயங்கியு
நெய்யெரிவளர்த்துப் பெய்முகிற்பெயறருந்
தெய்வவேதியர் தில்லைமூதூ
ராடகப்பொதுவி னாடகநவிற்றுங்
கடவுட்கண்ணுத னடமுயன்றெடுத்த
பாதப்போதும் பாய்புலிப்பட்டு
மீதியாத்தசைத்த வெள்ளெயிற்றரவுஞ்
சேயுயரகலத் தாயிரங்குடுமி
மணிகிடந்திமைக்கு மொருபேராரமு
மருள்பொதிந்தலர்ந்த திருவாய்மலரு
நெற்றியிற்றிகழ்ந்த வொற்றைநாட்டமுங்
கங்கைவழங்குந் திங்கள்வேணியுங்
கண்ணிடைப்பொறித்து மனத்திடையழுத்தியாங்
குண்மகிழ்ந்துரைக்க வுறுதவஞ்செய்தன
னான்முகன்பதத்தின் மேனிகழ்பதந்தா
னுறுதற்கரியது முண்டோ
பெறுதற்கரியதோர் பேறுபெற்றேற்கே. (உ0)

## வெண்பா.

பெற்றோர்பிடிக்கப் பிழைத்துச்செவிலியர்கள்
சுற்றோடவோடித் தொழாநிற்கு - மொற்றைக்கை
மாமறுகச்சீறியசிற் றம்பலத்தான்மான்றேர்போங்
கோமறுகிற்பேதைக் குழாம். (உக)

## கட்டளைக்கலித்துறை.

பேதையெங்கேயினித்தேறியுய்வாள்பிரமன்றனக்குந் தா
தைதன்றாதையென்றேத்தும்பிரான்றண்புலிசைப்பிரான், கோ
தையந்தாமத்தண்கொன்றைகொடானின்றுகொல்லவெண்ணி,
பூதையுங்காருந்துளியொடுங்கூடியுலாவியவே. (உஉ.)

## ஆசிரியவிருத்தம்.

உலவுசலதிவாழ்விட மமரர்தொழவுணவென
நுகருமொருவற்குரிய னுறுதியொருவராழிய
புலவுகமழ்கரோடிகை யுடையபுனிதர்பூசுரர்
புலிசையலர்செய்போதணி பொழிலினிழலின்வாழ்வதோர்
கலவமயிலனார்சுருள் கரியகுழலினார்குயில்
கருதுமொழியினார்கடை நெடியவிழியினாரித
ழிலவிலழகியாரிடை கொடியின்வடிவினார்வடி
வெழுதுமருமையாரென விதயமுழுதுமாள்வரே. (உங)

## இணைக்குறளாசிரியப்பா.

ஆளெனப்புதிதின்வந் தடைந்திலமத்துநின்
றளினேவ றலையினியற்றி
வழிவழிவந்த மரபினமொழிவது
ஐந்தெழுத்தவையெஞ் சிந்தையிற்கிடப்பி
னனவேபோல நாடொறும்பழகிக்
கனவிலுநவிற்றுங் காதலெம்வினைகெடக்
கேட்பதுநின்பெருங் கீர்த்திமீட்பது
நின்னெறியல்லாப் புன்னெறிபடர்ந்த
மதியினெஞ்சத்தை வரைந்துநிறுவென
வருத்திசெய்திடுவ துருத்திரசாதனங்
காலையுமாலையுங் கால்பெயர்த்திடுவதுன்
னாலயம்வலம்வரு தற்கேசால்பினிற்
கைகொடுகுயிற்றுவ தையநின்னது
கோயிற்பல்பணி குறித்தேயோயா
தருகினின்னிணைத் திருவிசோரக்
கண்ணிற்காண்பதெவ் வுலகிலுங்காண்பன வெல்லா
நீயேயாகி நின்றதோர்நிலையே நாயேன்
றலைகொடுசார்வதுன் சரண்வழியல்லா
லலைகடல்பிறழினு மடாதேயதனாற்

பொய்த்தவவேடர் கைத்தகப்படுத்தற்கு
வஞ்சச்சொல்லின் வார்வலைபோக்கிச்
சமயப்படுகுழி சமைத்தாங்கவையின்
மானுடமாக்களை வலியப்புகுத்து
மாறுவிரதத் தகப்படுத்தாழ்த்து
வளைவுணர்வெனக்கு வருமோவுளர்தரு
நுரையுந்திரையு நொப்புறுகொட்பும்
வரையில்சீகர வாரியுங்குரைகடற்
பெருத்துஞ்சிறுத்தும் பிறங்குவதோன்றி
யெண்ணில்வாகி யிருங்கடலடங்குந்
தன்மைபோலச் சராசரமனைத்து
நின்னிடைத்தோன்றி நின்னிடையடங்குநீ
யொன்றினுந்தோன்று யொன்றினுமடங்காய்
வானோர்க்கரியாய் மறைகளுக்கெட்டாய்
நான்மறையாளர் நடுவுபுக்கடங்கிச்
செம்பொற்றில்லை மூதூ
ரம்பலத்தாடு மும்பர்நாயகனே. (உச)

வெண்பா.

நாயனையவென்னைப் பொருட்படுத்திநன்களித்துத்
தாயனையனுயருளுந் தம்பிரான் — றூயவிரை
மென்றுழாய்மாலொடயன் றேடவியன்றில்லை
மன்றுளேயாடு மணி. (உரு)

கட்டளைக்கலித்துறை.

மணிவாய்முகிழ்ப்பத்திருமுகம்வேர்ப்பவம்மன்றுக்கெல்லா
மணியாயருணடமாடும்பிரானையடைந்துருகிப்
பணியாய்புலன்வழிபோநெஞ்சமேயினிப்பையப்பையப்
பிணியாய்க்கடைவழிசாதியெல்லோரும்பிணமென்னவே. உசு

ஆசிரியவிருத்தம்.

என்னுயினிமட வரலாய்செய்குவ
தினமாய்வண்டுகண் மலர்கிண்டித்
தென்னுவெனமுரல் பொழில்சூழ்தில்லையு
ளரனார்திருமுடி யணிதாமந்

தன்றலல்லது தீராதென்விடர்
தகையாதுயிர்கரு முகிலேற்றி
மின்றுநின்றது துளிவாடையும்வர
வீசாநின்றது பேசாயே. (உ௭)

இணைக்குறளாசிரியப்பா.

பேசுவாழி பேசுவாழி
யாசையொடுமயங்கி மாசுறுமனமே
பேசுவாழி பேசுவாழி
கண்டனமறையு முண்டனமலமாம்
பூசினமாசாம் புணர்ந்தனபிரியு
நிறைந்தனகுறையு முயர்ந்தனபணியும்
பிறந்தனவிறக்கும் பெரியனசிறுக்கு
மொன்றொன்றொருவழி நில்லாவன்றியுஞ்
செல்வமொடுபிறந்தோர் தேசொடுதிகழ்ந்தோர்
கல்வியிற்சிறந்தோர் கடுந்திறன்மிகுந்தோர்
கொடையிற்பொலிந்தோர் படையிற்பயின்றோர்
குலத்தினுயர்ந்தோர் நலத்தினின்வந்தோ
ரெனையரெங்குலத்தின ரிறந்தோரனையவர்
பேருநின்றில போலுந்தேரி
னீயுமஃதறிதி யன்றேமாயப்
பேய்த்தேர்போன்று நீப்பருமுறக்கத்துக்
கனவேபோன்று நனவுபெயர்பெற்ற
மாயவாழ்க்கையை மதித்துக்காயத்தைக்
கல்லினும்வலிதாக் கருதிப்பொல்லாத்
தன்மையரிழிவு சார்ந்தனைநீயு
நன்மையிற்றிரிந்த புன்மையையாதலி
னழுக்குடைப்புலன்வழி யிழுக்கத்தினெழுங்கி
வளைவாய்த்தூண்டிலி னுள்ளிரைவிழுங்கும்
பன்மீன் போலவு
மின்னுபுவிளக்கத்து விட்டில்போலவு
மாசையாம்பரிசத் தியானைபோலவு

மோசையின்விளிந்த புள்ளுப்போலவும்
வீசியமணத்தின் வண்டுபோலவு
முறுவதுணராச் செறுவுழிச்சேர்ந்தனே
நண்ணூனாற்றுத் தன்னகப்படுக்கு
மறிவில்கிடத்து நந்துழிபோல
வாசைச்சங்கிலிப் பாசத்தொடர்ப்பட்
டிடர்கெழுமனத்தினே டியற்றுவதறியாது
குடர்கெழுசிறையறைக் குறங்குபுகிடத்தி
கறவைநினைந்த கன்றெனவிரங்கி
மறவாமனத்து மாசறுமடியார்க்
கருள்சுரந்தளிக்கு மற்புதக்கூத்தனே
மறையவர்தில்லை மன்றுளாடு
மிறையவனென்கிலை யென்னினைந்தனையே. (உஅ)

வெண்பா.

நினையார்மெலியார் நிறையழியார்வாளாப்
புனைவார்க்குக்கொன்றை பொதுவோ - வனைவீரு
மெச்சியேகாண வியன்றில்லையானருளென்
பிச்சியேநாளைப் பெறும். (உகூ)

கட்டளைக்கலித்துறை.

பெறுகின்றவெண்ணிதாயரும்பேறுறும்யானுமென்னை
யுறுகின்றதுன்பங்களாயிரகோடியுமோய்வொடுஞ்சென்
றிறுகின்றநாள்களுமாகிக் கிடந்தவிடுக்கணெல்லா
மறுகின்றனதில்லையாளுடையான்செம்பொனம்பலத்தே. (௩0)

ஆசிரியவிருத்தம்.

அம்பலவரங்கண ரடைந்தவர்தமக்கே
யன்புடையரென்றுமிதெ னனையையுரித்துக்
கம்பலமுவந்தருளு வீர்மதனன்வேவக்
கண்டருளுவீர்பெரிய காதலறியாதே
வம்பலர்நிரைந்துவசை பேசவொருமாடே
வாடையுயிரீரமணி மாமையுமிழந்தென்
கொம்பலமருந்தகைமை கண்டுதகவின்றிக்
கொன்றையருளீர்கொடியி ரென்றருளுவீரே. (௩க)

## இணைக்குறளாசிரியப்பா.

அருளுவாழி யருளுவாழி
புரிசடைக்கடவு ளருளுவாழி
தோன்றுழித்தோன்றி நிலைதவக்கறங்கும்
புற்புதச்செவ்வியின் மக்களியாக்கைக்கு
நினைப்பினுங்கடிதே யிளமைநீக்க
மதனினுங்கடிதே மூப்பின்றொடர்ச்சி
யதனினுங்கடிதே கதுமெனமரணம்
வாணாள்பருகி யுடம்பைவறிதாக்கி
நாணாள்பயின்ற நல்காக்கூற்ற
மினையதன்மைய திதுவேயிதனை
யெனதெனக்கருதி யிதற்கென்றுதொடங்கிச்
செய்தனசிலவே செய்வனசிலவே
செய்யாநிற்பன சிலவேயவற்றிடை
நன்றென்பசிலவே தீதென்பசிலவே
யொன்றினும்படாதன சிலவேயென்றிவை
கணத்திடைநினைந்து களிப்பவுங்கலுழ்பவுங்
கணக்கில்கோடித் தொகுதியவைதா
மொன்றொன்றுணர்வுழி வருமோவனைத்து
மொன்றாவுணர்வுழி வருமோவென்றொன்று
தெளிவுழித்தேறல் செல்லேமளிய
மனத்தின்செய்கைமற் றிதுவேநீயே
யரியைசாலவெம் பெருமதெரிவுறி
னுண்டாய்த்தோன்றுவ யாவையுநீயே
கண்டனையவைநினைக் காணுவதுதா
னின்வயின் மறைத்தோ யல்லையுன்னை
மாயாய்மன்னினை நீயேவாழி
மன்னியுஞ்சிறுமையிற் கரந்தோயல்லை
பெருமையிற்பெரியோய் பெயர்த்துநீயே
பெருகியுஞ்சேணிடை நின்றோயல்லை
தேர்வோர்க்குத்தம்மினு மணியையநீயே

நண்ணியுமிடையொன்றின் மறைந்தோயல்லை
யிடையிட்டுநின்னை மறைப்பதுமில்லை
மறைப்பினு மதுவு
நீயேயாகி நின்றதொர்நிலையே யஃதான்று
நினைப்பருங்காட்சி நின்னிலையிதுவே
நினைப்புறுங்காட்சி யெந்நிலையதுவே
யினிநனியிரப்பதொன் றுடையமனமருண்டு
புன்மையினினைத்துப் புலன்வழிபடரினு
நின்வயினினைந்தே மாகுதனின்வயி
னினைக்குமாநினைக்கப் பெறுதலனைத்தொன்று
நீயேயருளல் வேண்டும்வேய்முதிர்
கயிலைபுல்லென வெறிவிசும்புவறிதாக
விம்பருய்ய வம்பலம்பொலியத்
திருவளர்தில்லை மூதூ
ரருநடங்குயிற்று மாதிவானவனே. (௩௨)

## வெண்பா.

வானோர்பணிய மணியாசனத்திருக்கு
மானதசெல்வத் தரசன்றே - மானகம்
பந்திப்பார்நின்றும் பைம்பொன்னிணம்பலத்தே
வந்திப்பார்வேண்டாத வாழ்வு. (௩௩)

## கட்டளைக்கலித்துறை.

வாழ்வாகவுந்தங்கள்வைப்பாகவுமறையோர்வணங்க
வாள்வாய்திருத்தில்லையம்பலத்தாயுன்னையன்றியொன்றைத்
தாழ்வாரறியாச்சடுலநஞ்சுண்டிலையாகிலன்றே
மாள்வார்சிலரையன்றோதெய்வமாகவணங்குவதே. (௩௪)

## ஆசிரியவிருத்தம்.

வணங்குமிடையீர்வறிது வல்லியிடையாண்மேன்
மாரசரமாரிபொழி யப்பெறுமனத்தோ
டுணங்கியிவடானுமெலி யப்பெறுமிடர்க்கே
யூதையெரிதூவியுல வப்பெறுமடுத்தே

பிணங்கியரவோடுசடை யாடநடமாடும்
பித்தரெனவும்மிதய மித்தனையுமோரீ
ரணங்குவெறியாடுமெறி யாடுமதுவீரு
மையலையுமல்லலையு மல்லதறியீரே. (௯௫)

நேரிசையாசிரியப்பா.

ஈரவேரித் தார்வழங்குசடிலத்துக்
குதிகொள்கங்கை மதியின்மீதசைய
வண்டியங்குவரைப்பி னெண்டோட்செல்வ
வொருபாற்றோடு மொருபாற்குழையு
மிருபாற்பட்ட மேனியெந்தை
யொல்லொலிப்பழனத் தில்லைமூதூ
ராடகப்பொதுவி னாடகவிற்று
மிமையாநாட்டத் தொருபெருங்கடவுள்
வானவர்வணங்குந் தாதையானே
மதுமழைபொழியும் புதுமந்தாரத்துத்
தேனியங்கொழுசிறைக் கானகத்தியற்றிய
தெய்வமண்டபத் தைவகையமளிச்
சிங்கஞ்சுமப்ப வேறிமங்கைய
ரிமையாநாட்டத் தமையாநோக்கத்
தம்மார்புபருகச்செம்மாந்திருக்கு
மாணுச்செல்வத்து வானோரின்ப
மதுவேயெய்தினு மெய்துககதுமெனத்
தெறுசொலாள ருறுசினந்திருகி
பெற்றியுமீர்த்துங் குற்றங்கொளீஇ
யீர்ந்தும்போழ்ந்து மெற்றுபுகுடைந்தும்
வார்ந்துங்குறைத்து மதராய்க்கிந்துஞ்
செக்குரற்பெய்துந் தீர்வாக்கியும்
புழுக்குடையழுவத் தழுக்கியல்சேற்றுப்
பன்னெடுங்கால மழுத்தியின்னா
வரையிறண்டத்து மாருக்கடுந்துயர்

நிரயஞ்சேரினுஞ் சேர்கவுரையிடை
யேனோரென்னை யானுதுவிரும்பி
நல்லனெனினு மென்கவவரே
யல்லனெனினு மென்கநில்லா
திருவொடுதிளைத்துப் பெருவளஞ்சிதையா
தின்பத்தழுந்தினு மழுந்துகவல்லாத்
துன்பந்துதையினுந் துதைகமுன்பி
னிளமையொடுபழகிக் கழிமூப்புக்குறுகா
தென்றுமிருக்கினு மிருக்கவன்றி
யின்றேயிறக்கினு மிறக்கவொன்றினும்
வேண்டலுமிலனே வெறுத்தலுமிலனே
யாண்டகைக்குரிசினின் னடியரொடுங்குழீஇத்
தெய்வக்கூத்துநின் செய்யபாதமு
மடையவுமணுகவும் பெற்ற
கிடையாச்செல்வங் கிடைத்தலானே. (௩௬)

## வெண்பா.

ஆனேறேபோந்தா லழிவுண்டேயன்புடைய
னானேதான்வாழ்ந்திடினு நன்றன்றே - வானோங்கு
வாமாண்பொழிற்றில்லை மன்றைப்பொலிவித்த
கோமானையித்தெருவே கொண்டு. (௩௭)

## கட்டளைக்கலித்துறை.

கொண்டல்வண்ணத்தவனான்முகனிந்திரன்கோமகுடத்
தண்டார்மிண்டித்தொழுமம்பலக்கூத்தனுக்கன்புசெய்யா
மிண்டர்மிண்டித்திரிவாரெனக்கென்னினிநானவன்றன்
றொண்டர்தொண்டர்க்குத் தொழும்பாய்த்திரியத்தொடங்கினனே.

## ஆசிரியவிருத்தம்.

தொடரநரைத்தங்க முன்புளவாயின
தொழில்கண்மறுத்தொன்று மொன்றியிடாதொரு
சுளிவுதலைக்கொண்டு புன்புலைவாரிக
ளொளியொழுகக்கண்டு சிந்தனையோய்வொடு

நடைகெடமுற்கொண்ட பெண்டிர்பொருவொரு
நடலைநமக்கென்று வந்தனபேசிட
நலியிருமற்கஞ்சி யுண்டிவெருவிழு
நரகவுடற்கன்பு கொண்டலையேனினி
மிடலொடியப்பண் டிலங்கையர்கோனொரு
விரலினமுக்குண்டு பண்பலபாடிய
விரகுசெவிக்கொண்டு முன்புளனாகிய
வெருளிதவிர்த்தன்று பொன்றியிடாவகை
திடமருள்வைக்குஞ் செழுஞ்சுடரூறிய
தெளியமுதத்தின் கொழுஞ்சுவைநீடிய
தில்லைநகரிற்செம்பொ னம்பலமேவிய
சிவனைநினைக்குந் தவஞ்சதுராவதே. ([illegible])

நேரிசையாசிரியப்பா.

சதுர்முகன்றந்தைக்குக் கதிர்விடுகடவு
ளாழிகொடுத்த பேரருள்போற்றி
முயற்சியொடுபணிந்த வியக்சர்கோனுக்கு
மாநிதியிரண்டு மாறாப்பெருவளத்
தளகையொன்று தளர்வின்றிநிறுவிய
செல்வங்கொடுத்த செல்வம்போற்றி
தாணிழலடைந்த மாணிக்காக
நாண்முறைபிறழாது கோண்முறைவலித்துப்
பதைத்துவருங்கூற்றைப் படிமிசைத்தெறிக்க
வுதைத்துயிரளித்த வுதவிபோற்றி
குலைகுலைந்த நிலையாத்தேவர்
படுபேரவல மிடையின்றிவிலக்கிக்
கடல்விடமருந்தின கருணைபோற்றி
தவிராச்சீற்றத் தவுணர்மூவெயி
லொல்லனல்கொளுவி யொருநொடிபொடிபட
வில்லொன்றுவளைத்த வீரம்போற்றி
பூமென்கரும்பொடு பொடிபடநிலத்துக்
காமனைப்பார்த்த கண்ணுதல்போற்றி

தெய்வயாளி கைமுயன் றுகிழித்தெனக்
கரியொன் றுரித்த பெருவிறல் போற்றி
பண்டுபெரும்போர்ப் பார்த்தனுக்காகக்
கொண்டுநடந்த கோலம்போற்றி
விரற்பதமொன்றில் வெள்ளிமலையெடுத்த
வரக்கனைநெரித்த வாண்மைபோற்றி
விலங்கல்விண்டு வீழுந்தெனமுன்னாட்
சலந்தரற்றடிந்த தண்டம்போற்றி
தாதையையெறிந்த வேதியச்சிறுவற்குப்
பரிகலங்கொடுத்த திருவுளம்போற்றி
நின்முதல்வழிபடத் தன்மகற்றடிந்த
தொண்டர்மனையி லுண்டல்போற்றி
வெண்ணெயுண்ண வெண்ணுபுவந்து
நந்தாவிளக்கை நுந்துபுபெயர்த்த
தாவுபுல்லெலிக்கு மூவுலகாள
நொய்தினிலளித்த கைவளம்போற்றி
பொங்குளையழல்வாய்ப் புகைவிழியொருதனிச்
சிங்கங்கொன்ற சேவகம்போற்றி
வரிமிடற்றெறுழ்வலி மணியுருபகுவா
யுரகம்பூண்ட வொப்பனைபோற்றி
கங்கையுங்கடுக்கையுங் கலந்துழியொருபாற்
றிங்கள்சூடிய செஞ்சடைபோற்றி
கடவுளிருவ ரடியுமுடியுங்
காண்டல்வேண்டக் கனற்பிழம்பாகி
நீண்டுநின்ற நீளம்போற்றி
யாலம்பில்குநின் சூலம்போற்றி
கூறுதற்கரியநின் னேறுபோற்றி
யேகவெற்பன் மகிழுமகட்கிடப்
பாகங்கொடுத்த பண்புபோற்றி
தில்லைமாநகர் போற்றிதில்லையுட்
செம்பொனம்பலம் போற்றியம்பலத்

தாடுநாடகம் போற்றியென்றுங்
கென்றும்போற்றினு மென்றனக்கிறைவ
வாற்றலில்லை யாயினும்
போற்றிபோற்றிநின் பொலம்பூவடிக்கே. (௪0)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப் பிள்ளையார்

அருளிச்செய்த

# திருக்கழுமல மும்மணிக்கோவை.

---

இணைக்குறளாசிரியப்பா.

திருவளர்பவளப் பெருவரைமணந்த
மரகதவல்லி போலவொருகூ
றிமையச்செல்வி பிரியாதுவிளங்கப்
பாய்திரைப்பரவை மீமிசைமுகிழ்த்து
வளைகதிர்ப்பரிதி யாயிரந்தொகுத்த
வான்முறைதிரியாது மலர்மிசையிருந்தெனக்
கதிர்விடுநின்முகங் காண்டொறுங்காண்டொறு
முதிராவிளமுலை முற்றாக்கொழுந்தின்
திருமுகத்தாமரை செவ்வியின்மலரநின்
றையல்வாணுதற் றெய்வச்சிறுபிறை
யிளநிலாக்காண்டொறு மொளிபொடிப்புமலர்க்குநின்
செவ்வாய்க்குமுதஞ் செவ்விசெய்யநின்
செங்கைக்கமல மங்கைவனமுலை
யமிர்தகலச மமைவின்றேந்த
மலைமகடனது நயனக்குவளைநின்
பொலி[illegible] மறையோர்
கழுமலநெறிநின்று பொலிய
நாகர்நாடு மீமிசையிருந்து

பூமிசையுலகங் கீழ்முதற்றுழ்ந்தின்
கொன்றுவந்த குன்றுவெள்ளத்
துலகமூன்றுக்குங் களைகணாகி
முதலில்கால மினிதுவீற்றிருந்துழித்
தாதையொடுவந்த வேதியச்சிறுவன்
றளர்நடைப்பருவத்து வளர்பசிவருத்த
வன்னையோவென் றழைப்பமுன்னின்று
ஞானபோனகத்தரு ளட்டிக்குழைத்த
வானாத்திரளை யவன்வயினருள
வந்தணன்முனிந்து தந்தாரியாரென
வவனைக்காட்டுவ னப்பவானார்
தோடுடையசெவிய னென்றும்
பீடுடையபெம்மா னென்றுங்
கையிற்சுட்டிக் காட்ட
வையநீவெளிப்பட் டருளினையாங்கே (௧)

வெண்பா.

அருளின்கடலடியே னன்பென்னுமாறு
பொருளின்றிரள்புகலி நாத - னிருள்புகுதுங்
கண்டத்தானென்பாரைக் காதலித்துக்கைதொழுவா
ரண்டத்தார்நாமா ரதற்கு. (௨)

கட்டளைக்கலித்துறை.

ஆரணநான்கிற்குமப்பாலவனறியத்துணிந்த
நாரணனு[illegible]யானடுவாய்நிறைந்த
பூரணனெந்தைபுகலிப்பிரான்பொழிலத்தனைக்குங்
காரணனாந்தக்கரணங்கடந்தகருப்பொருளே. (௩)

இணைக்குறளாசிரியப்பா.

கருமுதற்றொடங்கிப் பெருநாளெல்லாங்
காமம்வெகுளி கழிபெரும்பொய்யெனுந்
தூய்மையில்குப்பை தொலைவின்றிக்கிடந்ததை
யரிதினிகழ்ந்து போக்கிப்பொருதிறன்

மையிருணிறத்து மதனுடையடுசினத்
தைவகைக்கடாவும் யாப்பவிழ்த்தகற்றி
யன்புகொடுமெழுகி யருள்விளக்கேற்றித்
துன்பவிருளைத் துரந்துமுன்புற
மெய்யெனும்விதானம் விரித்தூநொய்ய
கீழ்மையிற்றொடர்ந்து கிடந்தவென்சிந்தைப்
பாழறையுனக்குப் பள்ளியறையாக்கிச்
சிந்தைத்தாமரைச் செழுமலர்ப்பூந்தவி
செந்தைநீயிருக்க விட்டனனிந்த
நெடுநிலவளாகமு மடுகதிர்வானமு
மடையப்பரந்த வாரிவெள்ளத்து
நுரையெனச்சிதறி யிருசுடர்மிதப்ப
வரைபறித்தியங்கு மாருதங்கடுப்ப
மாலும்பிரமனு முதலியவானவர்
காலமிதுவெனக் கலங்காநின்றுழி
மற்றவருய்யப் பற்றியபுணையாய்
மிகநனிமிதந்த புகலிநாயக
வருணனிசுரக்கும் பிரளயவிடங்கபின்
செல்வச்சிலம்பு மெல்லெனமிழற்ற
வமையாக்காட்சி யிமையக்
கொழுந்தையு முடனேகொண்டிங்
கெழுந்தருளத்தகு மெம்பெருமானே. (கூ)

வெண்பா.

மானுமழுவுந் திருமிடற்றில்வாழுமிரு
டானும்பிறையுந் தரித்திருக்கும் - வானவர்க்கு
வெள்ளத்தேதோன்றிக் கழுமலத்தேவீற்றிருந்தென்
னுள்ளத்தேநின்ற வொளி. (கு)

கட்டளைக்கலித்துறை.

ஒளிவந்தவாபொய்மனத்திருணீங்கவென்னுள்ளவெள்ளந்
தெளிவந்தவாவந் [illegible] ரு
களிவந்தவாவன்புகைவந்தவாகடைசாரமையத்
தெளிவந்தவாநங்கழுமலவாணர்நமின்னருளே. (கூ)

## இணைக்குறளாசிரியப்பா.

அருள்பழுத்தளிந்த கருணைவான்கனி
யாராவின்பத் தீராக்காத
லடியவர்க்கமிர்த வாரிநெடுநிலை
மாடக்கோபுரத் தாடகக்குடுமி
மழைவயிறுகிழிக்குங் கழுமலவாணநின்
வழுவாக்காட்சி முதிராவிளமுலைப்
பாவையுடனிருந்த பரமயோகி
யானொன்றுணர்த்துவ னெந்தைமேனா
ளகிலலோகமு மனந்தயோனியு
நிகிலமுந்தோன்றநீ நினைந்தநாட்டொடங்கி
யெனைப்பலயோனியு நினைப்பரும்பேதத்
தியாரும்யாவையு மெனக்குத்தனித்தனித்
தாயராகியுந் தந்தையராகியும்
வந்திலாதவ ரில்லையானவர்
தந்தையராகியுந் தாயராகியும்
வந்திராதனு மில்லைமுந்து
பிறவாநிலனு மில்லையவ்வயி
னிறவாநிலனு மில்லைபிறிதி
லென்னைத்தின்னு வுயிர்களுமில்லை யானவை
தம்மைத்தின்னு தொழிந்ததுமில்லை யனைத்தே
காலமுஞ்சென்ற தியானிதன்மேலினி
யிளைக்குமாறிலனே நாயே
னைந்தாச்சோதிநின் னஞ்செழுத்துநவிலுந்
தந்திரம்பயின்றது மிலனேதந்திரம்
பயின்றவர்ப்பயின்றது மிலனேயாயினு
மியன்றதோர்பொழுதி னிட்டதுமலராச்
சொன்னதுமந்திர மாகவென்னையு
மிடர்ப்பிறப்பிறப்பெனு மிரண்டின்
கடற்படாவகை காத்தனின்கடனே. (எ)

மகத்தினின்வானவர்பற்கண்சிரந்தோணெரித்தருளுஞ்
சுகத்தினினீள்பொழினாரைப்பதியுட்சுரன்மகற்கு
முகத்ததுகையந்தக்கையதுமூக்கந்தமூக்கதனி
னகத்ததுவாயந்தவாய துபோலுமடுமருப்பே. (சு)

மருப்பையொருகைக்கொண்டு நாரையூர்மன்னும்
பொருப்பையடிபோற்றத் துணிந்தா - னெருப்பை
யருந்தவெண்ணுகின்றவெறும் பன்றேயவரை
வருந்தவெண்ணுகின்ற மலம். (எ)

மலஞ்செய்தவல்வினைநோக்கியுலகைவலம்வருமப்
புலஞ்செய்தகாட்சிக்குமரற்குமுன்னேபுரிசடைமேற்
சலஞ்செய்தநாரைப்பதியரன்றன்னைக்கனிதரவே
வலஞ்செய்துகொண்டமதக்களிறேயுன்னைவாழ்த்துவனே. (அ)

வனஞ்சாயவல்வினைநோய் நீக்கிவணசத்
தனஞ்சாயலைத்தருவா னன்றோ - வினஞ்சாயத்
தேரையூர்நம்பர்மகன் றிண்டோணெரித்தருளு
நாரையூர்நம்பர்மக னும். (கூ)

நாரணன்முன்பணிந்தேத்தநின்றெல்லைநடாவியவத்
தோரணவுந்திருநாரையூர்மன்னுசிவன்மகனே
காரணனேயெங்கணபதியேநற்கரிவதனா
வாரணனுண்பொருளேயென்பவர்க்கில்லையல்லல்களே. (க0)

அல்லல்களைந்தான்ற னம்பொனுலகத்தி
னெல்லைபுகுவிப்பா னீண்டுழவர் - செல்லல்களை
செங்கழுநீர்கட்குந் திருநாரையூர்ச்சிவன்சேய்
கொங்கெழுதாரைங்கரத்த கோ. (கக)

கோவிற்கொடியநமன்றமர்கூடாவகைவிடுவன்
காவிற்றிகழ்திருநாரைப்பதியிற்கரும்பனைக்கை
மேவற்கரியவிருமதத்தொற்றைமருப்பின்முக்க
ணேவிற்புருவத்திமையவன்றுன்பெற்றயானையையே. (கஉ)

யானைத்தியவெண்பா வென்னைநினைந்தடிமை
தானேசனார்த்தனற்கு நல்கினான் - றேனே
தொடுத்தபொழினாரையூர்ச் சூலம்வலனேந்தி
யெடுத்தமதமுகத்த வேறு. (௧௩)

ஏறியசீர்வீரணக்குடியேந்திழைக்கும்மிருந்தே
னாறியபூந்தார்க்குமரற்குமுன்னினைநண்ணலரைச்
சீறியவெம்பணைச்சிங்கத்தினுக்கிளையானைவிண்ணோர்
வேறியல்வாற்றொழுநாரைப்பதியுள்விநாயகனே. (௧௪)

கனமதில்சூழ்நாரையூர் மேவிக்கசிந்தார்
மனமருவினான்பயந்த வாய்ந்த - சினமருவு
கூசாரம்பூண்டமுகக் குஞ்சரக்கன்றென்றார்க்கு
மாசாரமோசொல்லு வான். (௧௫)

வானிற்பிறந்தமதிதவழும்பொழின்மாட்டளிசூழ்
தேனிற்பிறந்தமலர்த்திருநாரைப்பதிதிகழுங்
கோனிற்பிறந்தகணபதிதன்னைக்குலமலையின்
மானிற்பிறந்தகளிறென்றுரைப்பரிவ்வையகத்தே. (௧௬)

வையகத்தாரேத்த மதினாரையூர்மகிழ்ந்து
பொய்யகத்தாருள்ளம் புகலொழிந்து - கையகத்தோர்
மாங்கனிதன்கொம்பண்டம் [illegible]
னாங்கனிநஞ்சிந்தையமர் வான். (௧௭)

அமராவமரர்தொழுஞ்சரணாரைப்பதியமர்ந்த
குமராகுமரற்குமுன்னவனேகொடித்தேரவுணர்
தமராசறுத்தவன்றன்னுழைத்தோன்றினனேயெனாநின்
றமராமனத்தவராழ்நரகத்திலழுந்துவரே. (௧௮)

அவமதியாதுள்ளமே யல்லலறநல்ல
தவமதியாலேத்திச் சதுர்த்தோ - நவமதியாங்
கொம்பன்விநாயகன்கொங் கார்பொழில்சூழ்நாரையூர்
நம்பன்சிறுவன்சீர் நாம். (௧௯)

நாந்தனமாமனமேத்துகண்டாயென்றுநாண்மலராற்
ருந்தனமாகவிருந்தனனுரைப்பதிதன்னுளே
சேர்ந்தனனேயைந்துசெங்கையனேநின்றிரண்மருப்பை
யேந்தினனேயென்னையாண்டவனேயெனக்கென்னையனே. ()

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# கோயிற்றிருப்பண்ணியர்விருத்தம்.

---

நெஞ்சந்திருவடிக்கீழ்வைத்துநீண்மலர்க்கண்பனிப்ப
வஞ்சங்கடிந்துன்னைவந்தித்திலேனன்றுவானருய்ய
நஞ்சங்கருந்துபெருந்தகையேநல்லதில்லைநிறை
வஞ்செம்பவளவண்ணவருட்கியானினியாரென்பரே. (க)

என்[illegible]
வன்பின்வழிவந்தவாரமிர்தேயடியேனுரைத்த
வன்புன்மொழிகள்பொறுத்திகொலாம்வளர்தில்லைதன்னுண்
மின்புன்மிளிர்சடைவீசிநின்றாடியவிண்ணவனே. (உ)

அவநெறிக்கேவிழப்புக்கவிந்நானமூர்த்தாமைவாங்கித்
தவநெறிக்கேயிட்டதத்துவனேயத்தவப்பயனுஞ்
சிவநெறிக்கேயென்னையுய்ப்பவனேசெனனந்தொறுஞ்செய்
பவமறுத்தாள்வதற்கோதில்லைநட்டம்பயில்கின்றதே. (ந)

பயில்கின்றிலேனின்றிறத்திருநாமம்பனிமலர்த்தார்
முயல்கின்றிலேனுன்றிருவடிக்கேயப்பமுன்னுதில்லை
யியல்கின்றநாடகச்சிற்றம்பலத்துளெந்தாயிங்ஙனே
யயர்கின்றநானெங்ஙனேபெறுமாறுநின்னருளே. (ச)

[illegible]
[illegible]பருதிக்குழவியுமிழ்கின்றதேயொக்கும்பற்றுவிட்டோர்
கருதித்தொழுகழற்பா[illegible]குமெய்த்த
[illegible] (௫)

[illegible]வன்பு
மடலைப்பொலிமலர்மாலைமென்றோண்மேன்மயிர்க்கயிறு
[illegible]
விடலைக்கென்றுணைக்கழுகினுவேதவிநோதத்தையே. (௬)

வேதமுதல்வன்றலையுந்தலையாயவேள்விதன்று
ஞாதனவனெச்சனற்றலையுந்தக்கனார்தலையுங்
[illegible]
மாதவரென்றுமறைமொழியாலேவழுத்துவரே. (௭)

வழுத்தியசீர்த்திருமாலுலகுண்டுவன்பாம்புதன்னின்
கழுத்தருகேதுயின்றானுக்கப்பாந்தளைக்கங்கணமாச்
செழுத்திரணீர்த்திருச்சிற்றம்பலத்தான்றிருக்கையிட்ட
வழுத்தியகல்லொத்தனையனையமாயவனே. (௮)

மாயவன்முந்நீர்த்துயின்றவனன்[illegible]
போயவன்காணாதபூங்கழலைப்புலத்தினர்நெஞ்
சேயவன்சிற்றம்பல[illegible]
தாயவன்றன்பொற்கழலென்றலைமறைநன்னிழலே. (௯)

நிழல்படுபூணெடுமாலயன்காணாமைநீண்டவரே
தழல்படுபொன்னகலேத்தி[illegible]ருகநாடித்தமைக்
கெழில்படவீசிக்கரமெறிநீர்த்தில்லையம்பலத்தே
குழல்படுசொல்வழியாடுவர்யாவர்க்குங்கூத்திணையே. (௧௦)

கூத்தனென்றுந்தில்லைவாணனென்றுங்குழுமிட்டிமையோர்
ஏத்தனென்றுஞ்செவிமாட்டிசையாதேயிடுகணங்கை
மூத்தவன்பெண்டீர்குணலையிட்டாலுமுகிழிறந்த
சாத்தனென்று[illegible]னைவே. (௧௧)

தண்ணார்புனற்றில்லைச்சிற்றம்பலந்தன்னின்மன்னிநின்ற
விண்ணாளனைக்கண்டநாள்விருப்பாயென்னுடன்முழுதுங்
கண்ணாங்கிலோதொழக்கையாங்கிலோதிருநாமங்கள்கற்
றெண்ணும்பரிசெங்ஙும்வாயாங்கிலோவெனக்கிப்பிறப்பே. ௧௨

பிறவியிற்பெற்றபயனொன்றுகண்டிலம்பேரொலிநீர்
நறவியல்பூம்பொழிற்றில்லையுணாடகமாடுகின்ற
துறவியல்சோதியைச்சுந்தரக்கூத்தனைத்தொண்டர்தொண்ட
ருறவியல்வாற்கண்கள்கண்டுகண்டின்பத்தையுண்டிடவே. ௧௩

உண்டேனவரருளாரமிர்தத்தினையுண்டலுமே
கண்டேனெடுத்தகழலுங்கனலுங்கவித்தகையு
மொண்டேன்மொழியினைநோக்கியநோக்குமொளிநகையும்
வண்டேன்மலர் [illegible] (௧௪)

மணியொப்பனதிருமான்மகுடத்துமலர்க்கமலத்
தணியொப்பனவவன்றன்முடிமேலடியேனிடர்க்குத்
துணியச்சமைந்தநல்வீர்வாளனையனசூழ்பொழில்க
டிணியத்திகழ்தில்லையம்பலத்தான்றன்றிருந்தடியே. (௧௫)

அடியிட்டகண்ணினுக்கோவவனன்பினுக்கோவவுணர்
செடியிட்டவான்றுயர்சேர்வதற்கோதில்லையம்பலத்து
முடியிட்டகொன்றைநன்முக்கட்பிரானன்றுமூவுலகு
மடியிட்டகண்ணனுக்கீந்ததுவாய்ந்தவரும்படையே. (௧௬)

படைபடுகண்ணிதன்பங்கதென்றில்லைப்பரம்பரவல்
விடைபடுகேதுகவிண்ணப்பங்கேளென்விதிவசத்தாற்
கடைபடுசாதிபிறக்கினுநீவைத்தருளுகண்டாய்
புடைபடுகிங்கிணித்தாட்செய்யபாதமென்னுள்புகவே. (௧௭)

புகவுகிர்வாளெ [illegible] திகலங்கி
மிகவுகுமாற்கரும்பாதத்தனேல்வியன்றில்லைதன்னு
ணகவுகுலாமதிக்கண்ணியற்கங்கணனென்றனன்றுந்
தகவுகொலாந்தகவன்றுகொலாமென்றுசங்கிப்பனே. (௧௮)

சங்கோர்கரத்தன்மகன்றக்கன்றனவர்நான்முகத்தோன்
செங்கோலவிந்திரன்றோடலையூர்வெள்விசிருடல
மங்கோலவெவ்வழலாயிட்டழிந்தெரிந்தற்றனவா
லெங்கோனெழிற்றில்லைக்கூத்தன்கடைக்கண்சிவந்திடவே ( )

ஏவுசெய்மேருத்தடக்கையெழிற்றில்லையம்பலத்து
மேவுசெய்மேனிப்பிரானன்றியங்கணர்மிக்குளரோ
காவுசெய்காளத்திக்கண்ணுதல்வேண்டும்வரங்கொடுத்துத்
தேவுசெய்வான்வாய்ப்புனலாட்டியதிறல்வேடுவனே. (உ0)

வேடனென்றாள்வில்விசயற்குவெங்கணையன்றளித்த
கோடனென்றாள்குழைக்காதனென்றாளிடக்காதிலிட்ட
தோடனென்றாடொகுசீர்த்தில்லையம்பலத்தாடுகின்ற
சேடனென்றாண்மங்கையங்கைச்சரிவளைசிந்தினவே. (உக)

சிந்திக்கவுரையாடவுஞ்செம்மலராற்கழல்கள்
வந்திக்கவுமனம்வாய்கரமென்னும்வழிகள்பெற்றுஞ்
சந்திக்கிலர்சிலர்தெண்ணார்தண்ணார்தில்லையம்பலத்து
ளந்திக்கமர்திருமேனியெம்மான்றனருள்பெறவே. (உஉ)

அருடருசீர்த்தில்லையம்பலத்தான்றனருளின்றிப்
பொருடருவானத்தரசாதலிற்புழுவாதனன்றாஞ்
சுருடருசெஞ்சடையோனருளேற்றுறவிக்குநன்று
மிருடருகீழேழ்நரகத்துவீழுமிருஞ்சிறையே. (உஙூ)

சிறைப்புளவாம்புனல்சூழ்வயற்றில்லைச்சிற்றம்பலத்துப்
பிறைப்பிளவார்சடையோன்றிருநாமங்களேபிதற்ற
மிறைப்புளவாகிவெண்ணீறணிநோடேன்றம்கித்தகர்தம்
முறைப்புளவோவயன்மாலிறும்பர்தநாயகற்கே. (உச)

அகழ்சூழ்மதிற்றில்லையம்பலக்கூத்தவடியமிட்ட
முகிழ்ச்சூழிலையுமுகைகளு[illegible]
திகழ்சூழ்மலர்மழைதூவித்திறம்பயில்சிந்தையராயப்
புகழ்சூழிமையவர்போற்றித்தொழுநின்பூங்கழற்கே. (உ௫)

பூந்தண்பொழில்சூழ்புலியூர்ப்பொலிசெம்பொனம்பலத்து
வேந்தன்றனக்கன்றியாட்செய்வதென்னேவிரிதுணிமே
லாந்தண்பழையவவிழையன்பாகியபண்டைப்பறைச்
சேந்தன்கொடுக்கவதுவுந்திருவமிர்தாகியதே. (உசு)

ஆகங்கனகனைக்கிறியகோளரிக்கஞ்சிவிண்ணோர்
பாகங்கனங்குழையாயருளாயெனத்தில்லைப்பிரான்
வேகந்தருஞ்சிம்புள்விட்டரிவெங்கதஞ்செற்றிலனேல்
மோகங்கலந்தன்றுலந்ததன்றேவிந்தமூவுலகே. (உஎ)

மூவுலகத்தவரேத்தித்தொழுதில்லைமுக்கட்பிராற்
கேவுதொழிற்செய்யப்பெற்றவர்யாரெனிலேர்விடையாய்த்
தாவுதொழிற்பட்டெடுத்தனன்மாலயன்சாரதியா
மேவிரதத்தொடுபூண்டதொன்மாமிக்கவேதங்களே. (உஅ)

வேதகச்சிந்தைவிரும்பியவன்றில்லையம்பலத்து
மேதகக்கோயில்கொண்டோன்சேயவன்வீரணக்குடிவாய்ப்
போதகப்போர்வைப்பொறிவாளரவரைப்பொங்குசினச்
சாதகப்பெண்பிள்ளைதன்னையன்றந்ததலைமகனே. (உகூ)

தலையவன்பின்னவன்றாய்தந்தையிந்தத்தராதலத்து
நிலையவனீக்குந்தொழில்புரிந்தோனடுவாகிநின்ற
கொலையவன்சூலப்படையவனூலத்தெழுகொழுந்தி
னிலையவன்காண்டற்கருந்தில்லையம்பலத்துள்ளிறையே. (ஙo)

இறையுந்தெளிகிலர்கண்டுமெழிற்றில்லையம்பலத்து
ளுறையும்புனற்சென்னியோனருளாலன்றடுகரிமே
னிறையும்புகழ்த்திருவாரூரனுமிறைதார்ப்பரிமே
[illegible] (ஙக)

நல்வழிநின்றார்பகைநன்றுநொய்யருறவிலென்னுஞ்
சொல்வழிகண்டனம்யார்தொகுசீர்த்தில்லையம்பலத்து
வில்வழிதானவருூரெரித்தோன்வியன்சாக்கியனார்
கல்வழிநேர்நின்றளித்தனன்காண்கசிவகதியே. (ஙஉ)

கதியேயடியவரெ[illegible]க்க
நிதியேநிமிர்புன்சடையமிர்தேநின்னையென்னுள்வைத்த
மதியேவளர்தில்லையம்பலத்தாய்மகிழ்மாமலையாள்
பதியேபொறுத்தருளாய்கொடியேன்செய்தபல்பிழையே. ௩௩

பிழையாயினவேபெருக்கிநின்பெய்கழற்கன்புதன்னி
லுழையாதசிந்தையினேனையுமந்தாகினித்துவலை
முழையார்தருதலைமாலைமுடித்தமுழுமுதலே
புழையார்கரியுரித்தோன்றில்லைநாதபொறுத்தருளே. (௩௪)

பொறுத்திலனேனும்பன்னஞ்சினைப்பொங்கெரிவெங்கரத்தை
செறுத்திலனேனுநந்தில்லைப்பிரானைத்திரிபுரங்கள்
கறுத்திலனேனுங்கமலத்தயன்கதிர்மாமுடியை
யறுத்திலனேனுமமர[illegible]வே. (௩௫)

அடுக்கியசிலையாரயகலேந்தித்தசைபெலும்பி
லொடுக்கியமேனியொடூணிரப்பாரொள்ளிரணியனை
நடுக்கியமாநரசிங்கனைச்சிம்புளதாய்நரல
விடுக்கியபாதன்றன்றில்லைதொழாவிட்டவேழையரே. (௩௬)

ஏழையென்புன்மைகருதாதிடையறுவன்பெனக்கு
வாழிநின்பாதமலர்[illegible]டாய்
மாழைமென்னோக்கிதன்பங்கவளர்தில்லையம்பலத்துப்
போழிளந்திங்கள்சடைமுடிமேல்வைத்தபுண்ணியனே. (௩௭)

புண்ணியனேயென்றுபோற்றிசெயாதுபுலன்வழியே
நண்ணியனேற்கினியாதுகொலாம்புகலென்னுள்வந்திட்
டண்ணியனேதில்லையம்பலவாவலர்திங்கள்வைத்த
கண்ணியனேசெய்யகாமன்வெளுப்பக்கறுத்தவனே. (௩௮)

கறுத்தகண்டாவண்டவாணவருபுனற்கங்கைசடை
செறுத்தசிந்தாமணியேதில்லையாயென்னைத்தீவினைக
ளொறுத்தல்கண்டாற்சிரியாரோபிறரென்னுறுதுயரை
யறுத்தலசெய்யாவிடினர்க்கோவருஞ்சொலரும்பழியே. ௩௯

பழித்தக்கவுமிகழான்றில்லையான்பண்டுவேட்டுவனும்
பழிச்சிட்டிறைச்சிகலையவளித்தவிருக்குழங்கன்
மொழித்தக்கசீரதிபத்தன்படுத்திட்டமீன்முழுது
மிழித்தக்கவென்றுதமிர்துசெய்தானென்றியம்புவரே. (௪௦)

வரந்தருமாறிதன்மேலுமுண்டோவயற்றில்லைதன்னுட்
புரந்தரன்மாறெழுகின்றபிரான்புலைப்பொய்மையிலே
நிரந்தரமாய்நின்றவென்னையுமெய்ம்மையிற்றன்னடியார்
தரந்தருவான்செல்வத்தாழ்த்தினன்பேசருந்தன்மையிதே. ௪௧

தன்றுடரித்தாரியாவர்க்குமீளாவழிதருவான்
குன்றமதிற்றில்லைமூதூர்க்கொடிமேல்விடையுடையோன்
மன்றுடவும்பின்னுமற்றவன்பாதம்வணங்கியங்கே
யொன்றிரண்டில்விழுவரந்தோசிலவூமர்களே. (௪௨)

கணைகணிலாமையுந்தன்பொற்கழறுணையாதன்மையுந்
துணைகணிலாமுகக்கைக்கரிப்போர்வைச்சரணிணையான்
றணைகணிலாமலர்க்கொன்றையன்றண்புலியூரதென்றேன்
வணைகணிலாமைவணங்குமரங்கள்வரிசிலையே. (௪௩)

வரித்தடந்திண்சிலைமன்மதனுதலுமாழிவட்டந்
தரித்தவன்றன்மகனென்பதோர்பொற்புந்தவநெறிக
டெரித்தவன்றில்லையுட்சிற்றம்பலவன்றிருப்புருவ
நெரித்தலுங்கண்டதுவெண்பொடியன்றிநின்றிலவே. (௪௪)

நின்றிலவேவிசயன்னெடுஞ்சிந்தைகளிப்புறநீ
டென்றில்லைமாநடமாடும்பிரான்றன்றிருமலைமேற்
றன்றலையானடந்தேறிச்சரங்கொண்டிழிந்ததென்பர்
கன்றிணையேவிளமேலெறிந்தார்த்தகரியவனே. (௪௫)

கருப்புருவத்திருவார்த்தைகள்கேட்டலுங்கண்பனியேன்
விருப்புருவத்தினொடுள்ளமுருகேன்விதிர்விதிரே
னிருப்புருவச்சிந்தையென்னைவந்தாண்டதுமெவ்வண்ணமோ
பொருப்புருவப்புரிசைத்தில்லையாடல்புரிந்தவனே. (௪௬)

புரிந்தவன்பின்றியும்பொய்மையிலேயுந்திசைவழியே
விரிந்தகங்கைம்மலர்சென்னியிற்கூப்பில்வியநமனார்
பரிந்தவனார்புகலில்லைபதிமூன்றெரியவம்பு
தெரிந்தவெங்கோன்றன்றிரையார்புனல்வயற்சேண்டில்லையே

சேண்டில்லைமாநகர்த்திப்பியக்கூத்தனைக்கண்டுமன்பு
பூண்டிலைநின்னைமறந்திலையாங்கவன்பூங்கழற்கே
மாண்டிலையின்னம்புலன்வழியேவந்துவாழ்ந்திடுவான்
மீண்டனையென்னையென்செய்திடவோசிந்தைநீவிளம்பே. ௮௮

விளைவைத்தளர்வித்தவிண்டுவுந்தாமரைமேலயனு
மளவிற்கறியாவகைநின்றவன்றமடுக்கல்பெற்ற
தளர்விற்றிருநகையாளுநின்பாகங்கொறண்புலியூர்க்
களவிற்கனிபுரையுங்கள்ளவார்சடைக்கங்கையனே. (௮௯)

கங்கைவலமிடம்பூவலங்குண்டலந்தோடிடப்பாற்
றங்குங்கரம்வலம்வெம்மழுவீயிடம்பாந்தள்வலஞ்
சங்கமிடம்வலந்தோலிடமாடைவலமக்கிட
மங்குஞ்சரியம்பலவன்வலங்காணிடமணங்கே. (௯௦)

அணங்காடகக்குன்றமாதறவாட்டியவாலமர்ந்தாட்
கிணங்காயவன்றில்லையெல்லைமிதித்தலுமென்புருகா
வணங்காவழுத்தாவிழாவெழும்பாவைத்தவாமதர்த்த
குணங்காணிவளென்னவென்றுகொளாம்வந்[illegible]. (௯௧)

கூடுவதம்பலக்கூத்தனடியார்குழுவுதொறுந்
தேடுவதாங்கவனுக்கமச்செவ்வழியவ்வழியே
யோடுவதுள்ளத்திருத்துவதொண்சுடரைப்பிறவி
வீடுவதாகநினையவல்லோர்செய்யும்வித்தகமே. (௯௨)

வித்தகச்செஞ்சடை வெண்மதிக்கார்நிறக் கண்டத்தெண்டோ
மத்தகக்கைம்மலைப்போர்வைமதிற்றில்லைமன்னனைத்தரு [ண்
சித்தகக்கோயிலிருத்துந்திறத்தாகமிகர்க்கல்லாற்
புத்தகப்பேய்களுக்கெங்கித்ததோவரன்பொன்னடியே. (௯௩)

பொன்னம்பலத்துறைபுண்ணியனென்பர்புயன்மறந்த
கன்னன்மைதீரப்புனிற்றுக்கலிக்காமற்கன்றுபுன்கூர்
மன்னுமழைபொழிந்தீரறுவேலிகொண்டாங்கவற்கே
பின்னும்பிழைதவிர்த்தீரறுவேலிகொள்பிஞ்ஞகனே. (௫௪)

நேசனல்லேனினையேன்வினைதீர்க்குந்திருவடிக்கீழ்
வாசநன்மாமலரிட்டிறைஞ்சேனென்றன்வாயதனாற்
றேசனென்னேனைபொன்னார்திருச்சிற்றம்பலநிலவு
மீசனென்னேன்பிறப்பென்னாய்க்கழியுங்கொலென்றனக்கே.()

தனந்தலைசக்கரம்வானத்தலைமைகுபேரன்றக்கன்
வனந்தலையேறடர்த்தோன்வாசவனுயிர்பல்லுடலூர்
சினந்தலைகாலன்பகல்காமன்றனவர்தில்லைவிண்ணோ
ரினந்தலைவன்னருளான்முனிவாற்பெற்றிகந்தவரே. (௫௬)

அவமதித்தாழ்நரகத்திலிடப்படுமாதர்களுந்
தவமதித்தொப்பிலரென்னவிண்ணோருந்தகைமையரு
நவநிதித்தில்லையுட்சிற்றம்பலத்துநடம்பயிலுஞ்
சிவநிதிக்கேநினையாருநினைந்திட்டசெல்வருமே. (௫௭)

வருவாசகத்தினின்முற்றுணர்ந்தோனைவண்டில்லைமன்னைத்
திருவாதவூர்ச்சிவபாத்தியன்செய்திருச்சிற்றம்பலப்
பொருளார்தருதிருக்கோவைகண்டேயுமற்றப்பொருளைத்
தெருளாதவுள்ளத்தவர்கவிபாடிச்சிரிப்பிப்பரே. (௫௮)

சிரித்திட்டசெம்பவளத்தின்றிரளுஞ்செழுஞ்சடைமேல்
விரித்திட்டபைங்கதிர்த்திங்களும்வெங்கதப்பாந்தளுந்தீத்
தரித்திட்டவங்கையுஞ்சங்கச்சுருளுமென்னெஞ்சினுள்ளே
தெரித்திட்டவாதில்லைச்சிற்றம்பலத்துத்திருநடனே. (௫௯)

நடஞ்செய்சிற்றம்பலத்தான்முனிவென்செய்யுங்காமனன்று
கொடுஞ்சினத்திவிழித்தாற்குக்குளிர்ந்தனன்விற்கொடும்பூண்
விடுஞ்சினத்தானவர்வெந்திலர்வெய்தெனவெங்கதத்தை
யொடுங்கியகாலனந்நாளின்றுதையுண்டுவிட்டனனே. (௬௦)

விட்டங்கொளிமணிப்பூண்டிகழ்வன்மதன்மெய்யுரைக்கி
லிட்டங்கரியனல்லானல்லனம்பலத்தெம்பரன்மேற்
கட்டங்கியகணையெய்தலுந்தனைப்பொன்றூர்முடிமேற்
புட்டங்கிறேன்மகனுமென்றுபார்க்கப்பொடிந்தனனே. (௩௧)

பொடியேர்தருமேனியனாகிப்பூசல்புகவடிக்கே
கடிசேர்கணைகுளிப்பக்கண்டுகோயிற்கருவியில்லா
வடியேபடவமையுங்கணையென்றவரருணன்றன்
[illegible]ாய்கழலே. (௩௨)

கழலும்பசுபாசராமிமையோர்தாங்கழல்பணிந்திட்
டழலுமிருக்குந்தருக்குடையோரிட பால்வலப்பாற்
றழலுந்தமருகமும்பிடித்தாடிசிற்றம்பலத்தைச்
சுழலுமொருகாலிருகால்வரவல்லதோன்றல்களே. (௩௩)

தோன்றலைவெண்மதிதாங்கியைத்துள்ளியமாலயற்குத்
தான்றலைபாதங்கள்சார்வரியோன்றன்னைச்சார்ந்தவர்க்குத்
தேன்றலையான்பாலதுகலந்தாலன்னசீரனைச்சீர்
வான்றலைநாதனைக்காண்பதென்றோதில்லைமன்றிடையே. (௩௪)

மன்றங்கமர்திருச்சிற்றம்பலவடவனத்து
மின்றங்கிடைக்குந்திரட்கமாடக்கொல்வெண்டரங்கந்
துன்றங்கிளர்கங்கையானைசுடுசினத்தியரவக்
கன்றங்கடைசடைமேலடையாவிட்டகைதவமே. (௩௫)

தவனைத்தவத்தவர்க்கன்பனைத்தன்னடிபெற்றவுஞ்
சிவனைச்சிவக்கத்திரிபுரத்தைச்சிவந்தானைச்செய்ய
வவனைத்தவளத்திருநீறனைப்பெருநீர்கரந்த
பவனைப்பணியுமினும்பண்டைவல்வினைபற்றறவே. (௩௬)

பற்ற[illegible]ரம்வெந்துணைபம்பொழிற்றில்லைதன்னுட்
செற்றருமாமணிக்கோயிலினின்றதுதேவர்கணஞ்
சுற்றருமின்புகழேத்தித்திரிவதுசூழ்சடையோய்
புற்றரவாட்டித்திரியுமதுவொருபுல்லனவே. (௩௭)

புல்லறிவின்மற்றைத்தேவரும்பூம்புலியூருணின்ற
வல்லெறிமாமதிக்கண்ணியனைப்போலருளுவரே
கல்லெறிந்தானுந்தன்வாய்நீர்கதிர்முடிமேலுகுத்த
நல்லறிவாளனுமீளாவழிசென்றுநண்ணினரே. (௬௮)

நண்ணியதீவினைநாசஞ்செலுத்திநமனுலகத்
தெண்ணினைநீக்கியிமையோருலகத்திருக்கலுற்றீர்
பெண்ணினொர்பாகத்தன்சிற்றம்பலத்துப்பெருநடனைக்
கண்ணிணையார்தரக்கண்டுகையாரத்தொழுமின்களே. (௬௯)

கைச்செல்வமெய்திடலாமென்றுபின்சென்றுகண்குழித்தல்,
பொய்ச்செல்வர்செய்திடும் புன்மைகட்கேயென்றும் பொன்ற
லில்லா, வச்செல்வமெய்திட வேண்டுதியேதில்லை யம்பலத்து,
ளிச்செல்வன்பாதங்கருதிரந்தேனுன்னையென்னெஞ்சமே.(௭௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# திருத்தொண்டர் திருவந்தாதி.

---

பொன்னிவடகரைசேர்நாரையூரிற்புழைக்கைமுக
மன்னனறுபத்துமூவர்பதிதேமரபுசெயல்
பன்னவத்தொண்டத்தொகைவகைபல்குமந்தாதிதனைச்
சொன்னமறைக்குலநம்பிபொற்பாதத்துணைதுணையே.

## தில்லைவாழந்தணர்.

செப்பத்தகுபுகழ்த்தில்லைப் பதியிற்செழுமறையோ
ரொப்பப்புவனங்கண்மூன்றினும்பரினாரெரித்த
வப்பர்க்கமுதத்திருநடர்க்கந்திப்பிறையணிந்த
துப்பர்க்குரிமைத்தொழில்புரிவோர்தமைச்சொல்லுதுமே.(௧)

## திருநீலகண்டக்குயவனார்.

சொல்லச்சிவன்றிருவாணைதன்றூமொழிதோணசையை
யொல்லைத்துறந்துருமூத்ததற்பின்னுமைகோனருளால்
வில்லைப்புரைநுதலாளொடிளமைபெற்றின்பமிக்கான்
றில்லைத்திருநீலகண்டக்குயவனுஞ்செய்தவனே. (௨)

## இயற்பகைநாயனார்.

செய்தவர்வேண்டியதியாதுங்கொடுப்பச்சிவன்றவனாய்க்
கைதவம்பேசிநின்காதலியைத்தருகென்றலுமே
மைதிகழ்கண்ணியையீந்தவன்வாய்ந்தபெரும்புகழ்வந்
தெய்தியகாவிரிப்பூம்பட்டினத்துளியற்பகையே. (௩)

## இளையான்குடிமாறநாயனார்.

இயலாவிடைச்சென்றமாதவற்கின்னமுதாவிதைத்த
வயலார்முளைவித்துவாரிமனையலக்கால்வறுத்துச்
செயலார்பயிர்விழுத்தீங்கறியாக்குமவன்செழுநீர்க்
கயலாரிளையான்குடியுடைமாறனெங்கற்பகமே. (௪)

## மெய்ப்பொருணாயனார்.

கற்றநன்மெய்த்தவன்போலொரு பொய்த்தவன்காய்சினத்தா
செற்றவன்றன்னையவனைச்செறப்புகலுந்திருவாய் [ற்
மற்றவன்றத்தாநமரேயெனச்சொல்லிவானுலகம்
பெற்றவன்சேதிபன்மெய்ப்பொருளாமென்றுபேசுவரே. (௫)

## விறன்மிண்டநாயனார்.

பேசும்பெருமையவ்வாரூரனையும்பிரானவனு
மீசன்றனையும்புறகுதட்டென்றவனீசனுக்கே
நேசனெனக்கும்பிரான்மனைக்கேபுகநீடுதென்றல்
வீசும்பொழிற்றிருச்செங்குன்றமேயவிறன்மிண்டனே. (௬)

## அமர்நீதிநாயனார்.

மிண்டும்பொழிற்பழையாறையமர்நீதிவெண்பொடியின்
முண்டந்தரித்தபிராற்குநல்லூரின்முன்கோவணநேர்
கொண்டிங்கருளென்றுதன்பெருஞ்செல்வமுந்தன்னையுந்தன்
றண்டமதிநுதலாளையுமீந்ததொழிலினனே. (௭)

சுந்தரமூர்த்திநாயனார்.

தொழுதும்வணங்கியுமாலயன்றேடருஞ்சோதிசென்றாங்
கெ[illegible]ணங்காட்டியெனக்குன்குடி
முழுதுமடிமைவந்தாட்செயெனப்பெற்றவன்முரன்றே
ழுழுகுமலரின்றாரெம்பிரானம்பியாரூரனே. (அ)

எறிபத்தநாயனார்.

ஊர்மதின்மூன்றட்டவுத்தமற்கென்றேருயர்தவத்தோன்
றார்மலர்கொய்யாவருபவன்றண்டின்மலர்பறித்த
ஆர்மலைமேற்கொளும்பாகருடன்றுணியாக்குமவ
னேர்மலிமாமதில்சூழ்கருவூரிலெறிபத்தனே. (கூ)

ஏனாதிநாதநாயனார்.

பத்தனையேனாதிநாதனைப்பார்நீடெயினைதன்னு
ளத்தனைத்தன்னோடமர்மலைந்தானெற்றிநீறுகண்டு
கைத்தனிவாள்வீடொழிந்தவன்கண்டிப்பநின்றருளு
நித்தனையீழக்குலதீபனென்பரிந்நீணிலத்தே. (க0)

கண்ணப்பநாயனார்.

நிலத்திற்றிகழ்திருக்காளத்தியார்திருநெற்றியின்மே
னலத்திற்பொழிதருகண்ணிற்குருதிகண்டுண்ணடுங்கி
வலத்திற்கடுங்கணையாற்றன்மலர்க்கண்ணிடந்தப்பினான்
குலத்திற்கிராதனங்கண்ணப்பனாமென்றுகூறுவரே. (கக)

குங்குலியக்கலயநாயனார்.

ஏய்ந்தகயிறுதன்கண்டத்திற்பூட்டியெழிற்பனந்தாட்
சாய்ந்தசிவனிலைத்தானென்பர்காதலிதாலிகொடுத்
தாய்ந்தநற்குங்குலியங்கொண்டனற்புகைகாலனைமுன்
காய்ந்தவரற்கிட்டதென்கடவூரிற்கலயனையே. (கஉ)

மானக்கஞ்சாறநாயனார்.

கலசமுலைக்கன்னிகாதற்புதல்விகமழ்குழலை
நலசெய்தவத்தவன்பஞ்சவடிக்கிவைநல்கெனலு
மலசுமெனக்கருதாதவள்கூந்தலரிந்தளித்தான்
றலைசெய்மதிற்கஞ்சைமானக்கஞ்சாறனெனும்வள்ளலே. (கங)

## அரிவாட்டாயநாயனார்.

வள்ளற்பிராற்கமுதேந்திவருவோனுகலுமிங்கே
வெள்ளச்சடையாயமுதுசெய்யாவிடிலென்றலையைத்
தள்ளத்தகுமென்றுவாட்பூட்டியதடங்கையினன்கா
ணள்ளற்பழனக்கணமங்கலத்தரிவாட்டாயனே, (கச)

## ஆனாயநாயனார்.

தாயவன்யாவுக்குந்தாழ்சடைமேற்றனித்திங்கள்வைத்த
தூயவன்பாதந்தொடர்ந்துதொல்சீர்துளையாற்பரவும்
வேயவன்மேன்மழநாட்டுவிரிபுனன்மங்கலக்கோ
னாயவனானாயனென்னையுவந்தாண்டருளினனே. (கரு)

## சுந்தரமூர்த்திநாயனார்.

அருட்டுறையத்தற்கடிமைப்பட்டேனினியல்லனென்னும்
பொருட்டுறையாவதென்னேயென்னவல்லவன்பூங்குவளை
யிருட்டுறைநீர்வயனாவற்பதிக்கும்பிரானடைந்தோர்
மருட்டுறைநீக்கிச்சிவனார்வழிகாட்டிடவல்லவனே. (கசு)

## மூர்த்திநாயனார்.

[illegible]டமறவதின்மாள்வனென்றன்றுலவாய்ச்
சிவன்றிருமேனிக்குச்செஞ்சந்தனமாச்செழுமுழங்கை [னூர்
யுவந்தொளிர்பாறையிற்றேய்த்துலகாண்டவொண்மூர்த்திதன்
சிவந்தபொன்மாடமதுராபுரியென்னுநீள்பதியே. (கஎ)

## முருகநாயனார்.

பதிகந்திகழ்தருபஞ்சாக்கரம்பயிலுவினன்சீர்
மதியஞ்சடையாற்கலர்தொட்டணிபவன்யான்மகிழ்ந்த [ன்
றுதியங்கழற்சண்பைநாதற்குத்தோழன்வன்றொண்டனம்பொ
னதிகம்பெறும்புகலூர்முருகன்னெனுமந்தணனே. (கஅ)

## உருத்திரபசுபதிநாயனார்.

அந்தாழ்புனறன்னிலல்லும்பகலுநின்றுருத்ரத்தா
லுந்தாதவன்பொடுருத்திரஞ்சொல்லிக்கருத்தமைந்த
பைந்தாருருத்ரபசுபதிதன்னற்பதிவயற்கே
சந்தார்திருத்தலையூரென்றுரைப்பரிந்நானிலத்தே. (ககூ)

## திருநாளைப்போவார்நாயனார்.

நாவார்புகழ்த்தில்லையம்பலத்தானருள்பெற்றுநாளைப்
போவானவனும்புறத்திருத்தொண்டன்றன்புன்புலைபோய்
மூவாயிரவர்கைகூப்பமுனியாயவன்பதிதான்
மாவார்பொழிறிகழாதனூரென்பரிம்மண்டலத்தே. (௨0)

## திருக்குறிப்புத்தொண்டநாயனார்.

மண்டும்புனற்சடையான்றமர்தூசெற்றிவாட்டும்வகை
விண்டுமழைமுகில்வீடாதொழியின்யான்வீவனென்று
முண்டம்படப்பாறைமுட்டுமெழிலார்திருக்குறிப்புத்
தொண்டன்குலங்கச்சியேகாலியர்தங்குலமே. (௨௧)

## சண்டேசுரநாயனார்.

குலமேறியசெய்ஞலூரிற்குரிசில்குரைகடல்சூழ்
தலமேறியவிறற்சண்டிசண்டீசர்தந்தைதாளிரண்டும்
வலமேறியமழுவாலெறிந்தீசன்மணிமுடிமே
னலமேறியபால்சொரிந்தலர்சூட்டியநன்னிதியே. (௨௨)

## சுந்தரமூர்த்திநாயனார்.

நிதியார்துருத்திதென்வேள்விக்குடியாய்வினைமறந்த
மதியேற்கதிகுறிவைத்தபுகர்பின்னைமாற்றிடென்று
ஆதியாவருள்சொன்னவாற்றிவாரிடைப்பெற்றவன்கா
ணதியார்புனல்வயனாவலர்கோனென்றுநற்றவனே. (௨௩)

## திருநாவுக்கரசுநாயனார்.

நற்றவனல்லூர்ச்சிவன்றிருப்பாதந்தன்சென்னிவைக்கப்
பெற்றவன்மற்றிப்பிறப்பறவீரட்டர்பெய்கழற்கு
ளுற்றவனுற்றவிடமடையாரிடவொள்ளமுதாத்
துற்றவனாமூரினாவுக்கரசெனுந்தூமணியே. (௨௪)

மணியினைமாமறைக்காட்டுமருந்தினைவண்மொழியாற்
றிணியனநீள்கதவந்திறப்பித்தனதெண்கடலிற்
பிணியனகன்மிதப்பித்தனசைவப்பெருநெறிக்கே
யணியனநாவுக்கரையர்பிரான்றனருந்தமிழே. (௨௫)

## குலச்சிறைநாயனார்.

அருந்தமிழாகரன்வாதிலமணைக்கழுநுதிமே
லிருந்தமிழ்நாட்டிடையேற்றுவித்தோனெழிற்சங்கம்வைத்த
பெருந்தமிழ்மீனவன்றன்னதிகாரிபிரசமல்கு
குருந்தவிழ்சாரன்மணமேற்குடிமன்குலச்சிறையே. (௨௬)

## பெருமிழலைக்குறும்பநாயனார்.

சிறைநன்புனற்றிருநாவலூராளிசெழுங்கயிலைக்
கிறைநன்கழலணையெய்துமிவனருள்போற்றவின்றே
பிறைநன்முடியன்னடியடைவேனென்றுடல்பிரிந்தா
னறைநன்மலர்த்தார்மிழலைக்குறும்பனெனுநம்பியே. (௨௭)

## காரைக்காலம்மையார்.

நம்பன்றிருமலைநான்மிதியேனென்றுதாளிரண்டு
மும்பர்மிசைத்தலையானடந்தேறவுமைநகவுஞ் [ன்
செம்பொன்னுருவனென்னம்மையெனப்பெற்றவள்செழுந்தே
கொம்பினுகுகாரைக்காலினின்மேயகுலதனமே. (௨௮)

## அப்பூதியடிகணாயனார்.

தனமாவதுதிருநாவுக்கரசின்சரணமென்று
மனமார்புனற்பந்தர் வாழ்த்திவைத்தாங்கவன் வண்டமிழ்க்கே
யினமாத்தன்றுபெயரிடப்பெற்றவனெங்கள்பிரா
னனமார்வயற்றிங்களூரினில்வேதியனப்பூதியே. (௨௯)

## திருநீலநக்கநாயனார்.

பூதிப்புயத்தர்புயத்திற்சிலந்திபுகலுமஞ்சி
யூதித்துமிந்தமனைவியைநீப்பவுப்பாலவெல்லாம்
பேதித்தெழுந்தனகாணென்றுபிஞ்ஞகன்காட்டுமவ
லீதித்திகழ்சாத்தைநீலநக்கன்னெனும்வேதியனே. (௩௦)

## நமிநந்தியடிகணாயனார்.

வேதமறிக்கரத்தாரூரர்க்குவிளக்குநெய்யைத்
தீதுசெறியமண்கையரட்டாவிடத்தெண்புனலா
லேதமுறுகவருகரென்றன்றுவிளக்கெரித்தா
னாதனெழிலேமப்பேறூரதிபனமிநந்தியே. (௩௧)

### சுந்தரமூர்த்திநாயனார்.

நந்திக்குலம்பெருமாற்குநல்லாரூரினாயகற்குப்
பந்திப்பரியனசெந்தமிழ்ப்பாடிப்படர்புனலிற்
சிந்திப்பரியனசேவடிபெற்றவன்சேவடியே
வந்திப்பவன்பெயர்வன்றொண்டனென்பரிவ்வையகத்தே (௩௨)

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

வையமகிழயாம்வாழவமணர்வலிதொலைய
வையன்பிரமபுரத்தரற்கம்மென்குதலைச்செவ்வாய்
பையமிழற்றும்பருவத்துப்பாடப்பருப்பதத்தின்
றையலருள்பெற்றனனென்பர்ஞானசம்பந்தனையே. (௩௩)

பந்தார்விரலியர்வேள்செங்கட்சோழன்முருகனல்ல
சந்தாரகலத்துநீலநக்கன்பெயர்தான்மொழிந்து
கொந்தார்சடையர்பதிகத்திலிட்டடியேன்கொடுத்த
வந்தாதிகொண்டபிரானருட்காழியர்கொற்றவனே. (௩௪)

### ஏயர்கோன்கலிக்காமநாயனார்.

கொற்றத்திறலெந்தைதந்தைதன்றந்தையெங்கூட்டமெல்லாந்
தெற்றச்சடையாய்நினதடியேந்திகழ்வன்றொண்டனே
மற்றிப்பிணிதவிர்ப்பானென்றுடைவாளுருவியந்நோய்
செற்றுத்தவிர்கலிக்காமன்குடியேயர்சீர்க்குடியே. (௩௫)

### திருமூலநாயனார்.

குடிமன்னுசாத்தனூர்க் கோக்குலமேய்ப்போன்குரம்பைபுக்கு
முடிமன்னுகூனற்பிறையாளன்றன்னைமுழுத்தமிழின்
படிமன்னுவேதத்தின்சொற்படியேபரவிட்டெனுச்சி
யடிமன்னவைத்தபிரான்மூலனாகின்றவங்கணனே. (௩௬)

### தண்டியடிகணாயனார்.

கண்ணார்மணியொன்றுமின்றிக்கயிறுபிடித்தரற்குத்
தண்ணார்புனற்றடந்தொட்டலுந்தன்னைநகுமமணர்
கண்ணாங்கிழப்பவமணர்கலக்கங்கண்டம்மலர்க்கண்
விண்ணாம்பகனிடைப்பெற்றவனாரூர்விறற்றண்டியே. (௩௭)

### மூர்க்கநாயனார்.

கண்டலைச்சூழ்திருவேற்காட்டூர்மன்னன்றருகவற்றுக்
கொண்டவல்லாயம்வன்சூதினைவென்றுமுன் கொண்டபொரு
முண்டநன்னீற்றனடியவர்க்கீபவன்மூர்க்கனென்பர் [ண்
நண்டலைநீரொண்குடந்தையின்மேவுநற்சூதனையே. (௩௮)

### சோமாசிமாறநாயனார்.

சூதப்பொழிலம்பரந்தணன்சோமாசிமாறனென்பான்
வேதப்பொருளஞ்செழுத்தும்விளம்பியல்லான்மொழியா
னீதிப்பரன்மன்றுநித்தநியமன்பரவையென்று
மாதுக்குக்காந்தன்வன்றொண்டன்றனக்குமகிழ்துணையே. ௩௯

### சுந்தரமூர்த்திநாயனார்.

துணையுமளவுமில்லாதவன்றன்னருளே துணையாக்
கணையுங்கதிர்நெடுவேலுங்கறுத்தகயலிணையும்
பிணையுநிகர்த்தகட்சங்கிலிப்பரவைத்தோளிரண்டி
னணையுமவன்றிருவாரூரனின்றவற்புதனே. (௪௦)

### சாக்கியநாயனார்.

தகடனவாடையன்சாக்கியன்மாக்கற்றடவரையின்
மகடனக்காக்கக்குழைந்ததிண்டோள்வல்லகம்பர்செம்பொன்
திகழ்திருமேனியிற்செங்கல்லெறிந்துசிவபுரத்துப்
புகழ்காப்புக்கவனூர்சங்கமங்கைபுவனியிலே. (௪௧)

### சிறப்புலிநாயனார்.

புவனியிற்பூதியுஞ்சாதனமும்பொலிவார்க்கவர்க்
கவனியமர்க்குச்சிறப்புச்செய்தத்துவகாரணனு
மவனியிற்கீர்த்தித்தென்னாக்கூர்திப்பனமறையோன்
சிவனியமந்தலைநின்றதொல்சீர்ச்சிறப்புலியே. (௪௨)

### சிறுத்தொண்டநாயனார்.

புலியினதளுடைப்புண்ணியற்கின்னமுதாத்தனைத்தோ
ரொலியின்சதங்கைக்குதலைப்புதல்வனுடனரிந்தக்
கலியின்வலிகெடுத்தோங்கும்புகழ்ச்சிறுத்தொண்டன்கண்டாய்
மலியும்பொழிலொண்செங்காட்டங்குடியவர்மன்னவனே. ( )

## சேரமான்பெருமானாயனார்.

மன்னர்பிரானெதிர்வண்ணானுடலுவரூறிநீறூர்
தன்னர்பிரான்றமர்போலவருதலுந்தான்வணங்க
வென்னர்பிரானடிவண்ணானெனவடிச்சேரனென்னுந்
தென்னர்பிரான்கழறிற்றறிவானெனுஞ்சேரலனே. (௪௪)

சேரற்குத்தென்னாவலர்பெருமாற்குச்சிவனளித்த
சீரக்கடகரிமுன்புதன்பந்தியிவுளிவைத்த
வீரற்குவென்றிக்கருப்புவில்வீரனைவெற்றிகொண்ட
சூரற்கெனதுள்ளநின்றுசெய்தாயின்றுதொண்டுபட்டே. (௪௫)

## கணநாதநாயனார்.

தொண்டரையாக்கியவரவர்க்கேற்றதொழில்கள்செய்வித்
தண்டர்தங்கோனக்கணத்துக்குநாயகம்பெற்றவன்காண்
கொண்டல்கொண்டேறியமின்னுக்குக்கோலமடல்கடொறுங்
கண்டல்வெண்சோறளிக்குங்கடற்காழிக்கணநாதனே. (௪௬)

## கூற்றுவநாயனார்.

நாதன்றிருவடியேமுடியாகக்கவித்துநல்ல
போதங்கருத்திற்பொறித்தமையாலதுகைகொடுப்ப
வோதந்தழுவியஞாலமெல்லாமொருகோலின்வைத்தான்
கோதைநெடுவேற்களப்பாளனாகியகூற்றுவனே. (௪௭)

## சுந்தரமூர்த்திநாயனார்.

கூற்றுக்கெவனோபுகறிருவாரூரன்பொன்முடிமே
லேற்றுத்தொடையலுமின்னடைக்காயுமிடுதருமக்
கோற்றெருத்துகூனனுங்கூன்போய்க்குருடனுங்கண்பெற்றமை
சாற்றித்திரியும்பழமொழியாமித்தரணியிலே. (௪௮)

## பொய்யடிமையில்லாதபுலவர்.

தரணியிற்பொய்ம்மையிலாத்தமிழ்ச்சங்கமதிற்கபிலர்
பரணர்நக்கீரர்முதனாற்பத்தொன்பதுபல்புலவோ
ரருணமக்கியுந்திருவாலவாயரன்சேவடிக்கே
பொருளமைத்தின்பக்கவிபலபாடும்புலவர்களே. (௪௯)

## புகழ்ச்சோழநாயனார்.

புலமன்னியமன்னைச்சிங்களநாடுபொடிபடுத்த
குலமன்னியபுகழ்க்கோகனநாதன்குலமுதலோ
னலமன்னியபுகழ்ச்சோழனென்பர்நகுசுடர்வாள்
வலமன்னியவெறிபத்தனுக்கீந்ததொர்வண்புகழே. (௫௦)

## நரசிங்கமுனையரையநாயனார்.

புகழும்படியெம்பரமேதவர்க்குநற்பொன்னிடுவோ
னிகழும்படியோர்தவன்மடவார்புனைகோலமெய்க்கு
நிகழும்படிகண்டவனுக்கிரட்டிபொன்னிட்டவனி
டிகழுமுடிநரசிங்கமுனையரசன்றிறமே. (௫௧)

## அதிபத்தநாயனார்.

திறமமர்மீன்படுக்கும்பொழுதாங்கொருமீன்சிவற்கென்
றுறவமர்மாகடற்கேவிடுவோனொருநாட்கனக
நிறமமர்மீன்படநின்மலற்கென்றுவிட்டோன்கமலம்
புறமமர்நாகையதிபத்தனாகியபொய்யிலியே. (௫௨)

## கலிக்கம்பநாயனார்.

பொய்மைக்கடிந்த நம்புன்னியர்க்காட்பட்டுத்தன்னடியான்
சைவத்திருவுருவாய்வரத்தானவன்றாள்கழுவ
மையத்தவர்முன்புவெள்கிநீர்வாராவிடமனைவி
கையைத்தடிந்தவன்பெண்ணைகடந்தைக்கலிக்கம்பனே. (௫௩)

## கலியநாயனார்.

கம்பக்கரிக்குஞ்சிலந்திக்குநல்கியகண்ணுதலோ
னும்பர்க்குநாதற்கொளிவிளக்கேற்றற்குடலிலெண்ணய்க்
கும்பத்தயிலம்விற்றுஞ்செக்குழன்றுங்கொள்கலியிற்று
னம்பற்கெரித்தகலியொற்றிமாநகர்ச்செக்கிலியே. (௫௪)

## சத்திநாயனார்.

திரிவில்லவர்தம்மடியரைத்தன்முன்புரிபுன்மைசொன்ன
திருவில்லவரையக்நாவரிவோன்றிருத்தாரைவெல்லும்
வரிவில்லவன்வயற்செங்கழுநீரின்மருவுதென்ற
றொருவில்விரைகமழுந்தென்வரிஞ்சைத்திகழ்ச்சத்தியே. (௫௫)

## ஐயடிகள்காடவர்கோனாயனார்.

சத்தித்தடக்கைக்குமரனற்றாதைதன்றானமெல்லா
முத்திப்பதமொரோர்வெண்பாமொழிந்துமுடியரசா
மத்திற்குமும்மைநன்றாளாரற்காயையமேற்றலென்னும்
பத்திக்கடலையடிகளாகின்றநம்பல்லவனே. (௫௬)

## சுந்தரமூர்த்திநாயனார்.

பல்லவைசெங்கதிரோனைப்பறித்தவன்பாதம்புகழ்
சொல்லவன்றென்புகலூரரன்பாற்றுய்யசெம்பொன்கொள்ள
வல்லவனாட்டியத்தான்குடிமாணிக்கவண்ணனுக்கு
நல்லவன்றன்பதிநாவலூராகின்றநன்னகரே. (௫௭)

## கணம்புல்லநாயனார்.

நன்னகராய [illegible] தனினல்குரவாய்ப்
பொன்னகராயநற்றில்லைபுகுந்துபுலீச்சரத்து
மன்னவராயவரற்குநற்புல்லால்விளக்கெரித்தான்
கன்னவிறோளெந்தைதந்தைபிரானெங்கணம்புல்லனே. (௫௮)

## காரிநாயனார்.

புல்லனவாகாவகையுலகத்துப்புணர்ந்தனவுஞ்
சொல்லினவுந்நயமாக்கிச்சுடர்பொற்குவடுதனி
வில்லனைவாழ்த்திவிளங்குங்கயிலைபுக்கானென்பராற்
கல்லனமாமதில்சூழ்கடவூரினிற்காரியையே. (௫௯)

## நெடுமாறநாயனார்.

கார்த்தண்முகிற்கைக்கடற்காழியர்பெருமாற்கெதிரா
யார்த்தவமணரழிந்த [illegible] ரைக்
கூர்த்தகழுவினுதிவைத்தபஞ்சவனென்றுரைக்கும்
வார்த்தையதுபண்டுநெல்வேலியில்வென்றமாறனுக்கே. (௬0)

## வாயிலார்நாயனார்.

மாறுவருளரன்றன்னைமனவாலயத்திருத்தி
யாறுவதியாமொளிவிளக்கேற்றியசமலர்வாம்
வீறுமலரளித்தன்பெனுமெய்யமிர்தங்கொடுத்தான்
வீறார்மயிலையுள்வாயிலானென்றுவிளம்புவரே. (௬௧

## முனையடுவார்நாயனார்.

என்றுவிளம்புவர்நீடூரதிபன்முனையடுவோ
னென்றுமமருளழிந்தவர்க்காக்கூலியேற்றெறிந்து
வென்[illegible]ங்கனகன்மேருவென்னுங்
குன்றுவளைத்தசிலையான்றமர்க்குக்கொடுத்தனனே. (௬௨)

## சுந்தரமூர்த்திநாயனார்.

கொடுத்தான்முதலைகொள்பிள்ளைக்குயிரன்றுபுக்கொளியூர்த்
தொடுத்தான்மதுரகவியவிநாசியைவேடர்சுற்றம்
படுத்தான்றிருமுருகன்பூண்டியினிற்பராபரத்தேன்
மடுத்தானவனென்பர்வன்றொண்டனாகின்றமாதவனே. (௬௩)

## கழற்சிங்கநாயனார்.

மாதவத்தோர்தங்கள்வைப்பினுக்காரூர்மணிக்குவைத்த
போதினைத்தான்மோந்ததேவிதன்மூக்கையரியப்பொற்கை
காதிவைத்தன்றோவரிவதென்றங்கவள்கைதடிந்தா
னாதமொய்த்தார்வண்டுகிண்டுபைங்கோதைக்கழற்சிங்கனே. ()

## இடங்கழிநாயனார்.

சிங்கத்துருவனைச்செற்றவன்சிற்றம்பலமுகடு
கொங்கிற்கனகமணிந்தவாதித்தன்குலமுதலோன்
றிங்கட்சடையர்தமரதென்செல்வமெனப்பறைபோக்
கெங்கட்கிறைவனிருக்குவேளூர்மன்னிடங்கழியே. (௬௫)

## செருத்துணைநாயனார்.

கழிநீள்கடனஞ்சயின்றூர்க்கிருந்தகடிமலரை
மொழிநீள்புகழ்க்கழற்சிங்கன்றன்றேவிமுன்மோந்தலுமே
யெழினீள்குமிழ்மலர்மூக்கரிந்தானென்றியம்புவராற்
செழுநீர்மருகனன்னாட்டமர்தஞ்சைச்செருத்துணையே. (௬௬)

## புகழ்த்துணைநாயனார்.

செருவிலிபுத்தூர்ப்புகழ்த்துணையையஞ்சிறுவிலைத்தா
வுருவலிகெட்டுணவின்றியுமைகோனைமஞ்சனஞ்செய்
தருவதோர்போதுகைசோர்ந்துகலசம்விழத்தரியா
தருவரைவில்லியருளுநிதியதுபெற்றனனே. (௬௭)

## கோட்புலிநாயனார்.

பெற்றமுயர்த்தோன்விரையாக்கலிபிழைத்தோர்தமது
சுற்றமறுக்குந்தொழிற்றிருநாட்டியத்தான்குடிக்கோன்
குற்றமறுக்குநங்கோட்புலிநாவற்குரிசிலருள்
பெற்றவருட்கடலென்றுலகேத்தும்பெருந்தகையே. (௬௮)

## சுந்தரமூர்த்திநாயனார்.

தருமகட்பேசினான்வீயவேநூல்போனசங்கிலிபாற்
புகுமணக்காதலினாலொற்றியூருறைபுண்ணியன்றன்
மிகுமலர்ப்பாதம்பணிந்தருளாலிவ்வியனுலக
நகும்வழக்கேநன்மையாப்புணர்ந்தானவனூரரசே. (௬௯)

## பத்தராய்ப்பணிவார்கள்.

அரசினையாரூரமரர்பிரானையடிபணிந்திட்
டுரைசெய்தவாய்தடுமாறியுரோமபுளகம்வந்து
கரசரணாதியவயவங்கம்பித்துக்கண்ணருவி
சொரிதருமங்கத்தினோர்பத்தரென்றுதொகுத்தவரே. (௭0)

## பரமனையேபாடுவார்.

தொகுத்தவடமொழிதென்மொழியாதொன்றுதோன்றியதே
மிகுத்தவியலிசைவல்லவகையில்விண்டோயுநெற்றி
வகுத்தமதிற்றில்லையம்பலத்தான்மலர்ப்பாதங்கண்மே
லுகுத்தமனத்தொடும்பாடவல்லோரென்பருத்தமரே. (௭௧)

## சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

உத்தமத்தானத்தறம்பொருளின்பமொடியெறிந்து
வித்தகத்தானத்தொருவழிக்கொண்டுவிளங்கச்சென்னி
மத்தம்வைத்தான்றிருப்பாதகமலமலரிணைக்கீழ்ச்
சித்தம்வைத்தாரென்பர்வீடுபேறெய்தியசெல்வர்களே. (௭௨)

## திருவாரூர்ப்பிறந்தார்கள்.

செல்வந்திகழ்திருவாரூர்மதில்வட்டத்துட்பிறந்தார்
செல்வன்றிருக்கணத்துள்ளவரேயதனாற்றிகழச்
செல்வம்பெருகுதென்னாரூர்ப்பிறந்தவர்சேவடியே
செல்வநெறியுறுவார்க்கணித்தாயசெழுநெறியே. (௭௩)

முப்போதுந்திருமேனிதீண்டுவார்.

நெறிவார்சடையரைத்தீண்டிமுப்போதுநீடாகமத்தி
னறிவால்வணங்கியர்ச்சிப்பவர்நம்மையுமாண்டமரர்க்
கிறையாய்முக்கண்ணுமெண்டோளுந் தரித்திறல்செல்வத்தொ
டுறைவார்சிவபெருமாற்குறைவாயவுலகினிலே. (௭௪)

முழுநீறுபூசியமுனிவர்.

உலந்தலங்கினுமூழிதிரியினுமுள்ளொருகால்
விலகுதலில்லாவிதியதுபெற்றநல்வித்தகர்கா
ணலகில்பெருங்குணத்தாரூரமர்ந்தவரனடிக்கீ
ழிலகுவெண்ணீறுதம்மேனிக்கணியுமிறைவர்களே. (௭௫)

அப்பாலுமடிச்சார்ந்தார்.

வருக்கமடைத்துநன்னாவலூர்மன்னவன்வண்டமிழாற்
பெருக்குமதாரத்தொகையிற்பிறைசூடிபெய்கழற்கே
யொருக்குமனத்தொடப்பாலடிச்சார்ந்தவரென்றுலகிற்
றெரிக்குமவர்சிவன்பல்கணத்தோர்நஞ்செழுந்தவரே. (௭௬)

சுந்தரமூர்த்திநாயனார்.

செழுநீர்வயன்முதுகுன்றினிற்செந்தமிழ்பாடிவெய்ய
மழுநீடக்கையனீந்தபொன்னாற்றுக்கொள்ளாதுவந்தப்
பொழினீடுதிருவாரூரில்வாசியும்பொன்னுங்கொண்டோன்
கெழுநீள்புகழ்த்திருவாரூரனென்றுநாங்கேட்பதுவே. (௭௭)

பூசலார்நாயனார்.

பதுமநற்போதன்னபாதத்தரற்கொருகோயிலையான்
கதுமெனச்செய்குவதென்றுகொலாமென்றுகண்டுயிலா
ததுமனத்தேயெல்லிதோறுநினைந்தருள்பெற்றதென்பர்.
புதுமணத்தென்றலுலாநின்றவூர்தனிற்பூசலையே. (௭௮)

மங்கையர்க்கரசியார்.

பூசலயிற்றென்னனார்க்கனலாகப்பொருமையினாற்
வாசமலர்க்குழற்பாண்டிமாதேவியாமானிகண்டீர்
தேசம்விளங்கத்தமிழாகரர்க்கறிவித்தவரா
னாசம்விளைத்தாளருகந்தருக்குத்தென்னாட்டகத்தே. (௭௯)

## நேசநாயனார்.

நாட்டமிட்டன்றறிவந்திப்பவெல்படைநல்கினர்தந்
தாட்டரிக்கப்பெற்றவனென்பர்சைவத்தவரரையிற்
கூட்டுமக்கப்படங்கோவணநெய்துகொடுத்துநன்மை
யீட்டுமக்காம்பீலிச்சாலியநேசனையிம்மையிலே. (௮௦)

## கோச்செங்கட்சோழநாயனார்.

மைவைத்தகண்டனெறியன்றிமற்றோர்நெறிகருதாத்
தெய்வக்குடிச்சோழன்முன்புசிலந்தியாய்ப்பந்தர்செய்து
சைவத்துருவெய்திவந்துதரணிநீடாலயங்கள்
செய்வித்தவன்றிருக்கோச்செங்கணானெனுஞ்செம்பியனே. ௮௧

செம்பொனணிந்துசிற்றம்பலத்தைச்சிவலோகமெய்தி
நம்பன்கழற்கீழிருந்தோன்குலமுதலென்பர்நல்ல
வம்புமலர்த்தில்லையீசனைச்சூழமறைவளர்த்தா
னிம்பருந்தொங்கற்கோச்செங்கணானெனுநித்தனையே. (௮௨)

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்.

தனையொப்பருமெருக்கத்தம்புலியூர்த்தகும்புகழோ
னினையொப்பருந்திருநீலகண்டப்பெரும்பாணனைநீள்
சினையொப்பலர்பொழிற்சண்பையர்கோன்செந்தமிழொடிசை
புனையப்பரனருள்பெற்றவனென்பரிப்பூதலத்தே. (௮௩)

## சடையநாயனார்.

நலம்விளங்குந்திருநாவலூர்தன்னிற்சடையனென்னுங்
குலம்விளங்கும்புகழோனையுரைப்பர்குவலயத்தி
னலம்விளங்கும்படிநாம்விளங்கும்படிநற்றவத்தின்
பலம்விளங்கும்படியாரூரனைமுன்பயந்தமையே. (௮௪)

## இசைஞானியார்.

பயந்தாள்கருவுடைச்செங்கண்வெள்ளைப்பொள்ளனிள்பனை
க்கைக், கயந்தானுகைத்தநற்காளையையென்றுங்கபாலங்கைக்
கொண், டயந்தான்புகுமாரூர்ப்புனிதவரன்றிருத்தா, ணயந்
தாடனுள்ளத்தென்றுமுரைப்பதுஞானியையே. (௮௫)

சுந்தரமூர்த்திநாயனார்.

ஞானவாரூரரைச்சேரரையல்லதுநாமறியோ
மானவவாக்கையொடும்புக்கவரைவளரொளிப்பூண்
வானவராலுமருவற்கரியவடகயிலைக்
கோனவன்கோயிற்பெருந்தவத்தோர்தங்கள்கூட்டத்திலே. ()

திருத்தொண்டத்தொகையிலுள்ள
கூட்டவடியார்கள் தனியடியார்கள்

கூட்டமொன்பானொடறுபத்துமூன்றுதனிப்பெயரா
னீட்டும்பெருந்தவத்தோரெழுபத்திரண்டாம்வினையை
வாட்டுந்தவத்திருத்தொண்டத்தொகைபதிணொன்றின்வகைப்
பாட்டுந்திகழ்திருநாவலூராளிபணித்தனனே. (அஎ)

திருத்தொண்டத்தொகைப்பதிகக்
கவிகளின் முதற்குறிப்பு.

பணித்தநற்றொண்டத்தொகைமுதறில்லைவாழந்தணர்
வணித்திகழ்மும்மைதிருநின்றவம்பருவார்கொண்டசீ
ரினைத்தநற்பொய்யடிமைகறைக்கண்டன்கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ்சொற்பத்தர்மன்னியசீர்மறைநாவனொடே. (அஅ)

நூற்பயன்.

ஓடிடும்பஞ்சேந்திரியமொடுக்கியென்னூழ்வினைகள்
வாடிடும்வண்ணநின்றெத்தவஞ்செய்தனன்வானிநுள்ளோர்
சூடிடுஞ்சீர்த்திருப்பாதத்தர்தொண்டத்தொகையினுள்ள
சேடர்தஞ்செல்வப்பெரும்புகழந்தாதிசெப்பிடவே. (அகூ)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி.

பார்மண்டலத்தினிற்பன்னிருபேரொடுமன்னிநின்ற
நீர்மண்டலப்படப்பைப்பிரமாபுரநீறணிந்த
கார்மண்டலக்கண்டத்தெண்டடந்தோளன்கருணைபெற்ற
தார்மண்டலமணிசம்பந்தன்மேவியதண்பதியே. (௧)

பதிகப்பெருவழிகாட்டப்பருப்பதக்கோன்பயந்த
மதியத்திருநுதல்பங்கனருள்பெறவைத்தவெங்க
ணிதியைப்பிரமாபுரநகர்மன்னனையென்னுடைய
கதியைக்கருதவல்லோரமராவதிகாப்பவரே. (௨)

காப்பயில்காழிக்கவுணியர்தீபற்கென்காரணமா
மாப்பழிவாராவகையிருப்பேனென்னமாரனென்னே
பூப்பயில்வாளிகளஞ்சுமென்னெஞ்சரங்கப்புகுந்த
வேப்பயில்வார்சிலைகால்வளையாநிற்குமீண்டிரவே. (௩)

இரவும்பகலுநின்பாதத்தலரென்வழிமுழுதும்
பரவும்பரிசேயருளுகண்டாயிந்தப்பாரகத்தே
விரவும்பரமதகோளரியேகுடவெள்வளைக
டரளஞ்சொரியுங்கடல்புடைசூழ்ந்ததராய்மன்னனே. (௪)

மன்னியமோகச்சுவையொளியூறோசைநாற்றமென்றிப்
பன்னியவைந்தின்பதங்கடந்தோர்க்குந்தொடர்வரிய
பொன்னியல்பாடகக்கிங்கிணிப்பாதநிழல்புகுவோர்
துன்னியகாவமர்சண்பையர்நாதற்குத்தொண்டர்களே. (௫)

தொண்டினஞ்சூழச்சுரிகுழலார்தம்மனந்தொடர
வண்டினஞ்சூழவருமிவன்போலுமயிலுகுத்த
கண்டின [illegible] ரம்போர்சழுவாவுடலம்
விண்டினஞ்சூழக்கழுவினையாக்கியவித்தகனே. (௭)

வித்தகம்பேசிநம்வெணுத்தலைவனைவாணிகர்த்து
முத்தயங்காட்டுமுறுவனல்லார்தமனமனைய
வுய்த்தகம்போந்திருந்துள்ளவுமில்லாதனவுமுறு
புத்தகம்போலுமுறுபுலைப்பாணன்புணர்க்கின்றதே. (௮)

புணர்ந்தநன்மேகச்சிறுநுண்டுளியிற்சிறகொதுக்கி
யுணர்ந்துனர்போலவிருந்தனையாலுலகம்பரவுங்
குணந்திகழ்ஞானசம்பந்தன்கொடிமதிற்கொச்சையின்வாய்
மணந்தவர்போயினரோசொல்லுவாழிமடக்குருகே. (௯)

குருந்தலர்முல்லையங்கோவலரேற்றின்கொலைமருப்பா
லருந்திறலாகத்துழுதசெஞ்சேற்றருகாசனிதன்
பெருந்திறமாமதிற்சண்பைநகரன்னபேரமைத்தோட்
டிருந்திழையார்வம் முரசே. (௰)

முரசங்கறையமுன்றேரணநீடமுழுமதியின்
பரிசங்கொணர்வானமைகின்றனர்பலர்பார்த்திவிர்
யரிசங்கணைதலென்றுமுன்கருதருகாசனிதன்
சுரிசங்கணைவயற்றந்நகரன்னதூமொழிக்கே. (௧௧)

மொழிவதுசைவசிகாமணிசீர்த்தடவரைத்தோ
டொழுவதுமற்றவன்றூமலர்ப்பாதங்கடாமஞ்சமழ்த்
தெழுவதுகூந்தலம்பூந்தாமரையினியாதுகொலோ
மொழிவதுசேரி மாதர்முறுவலித்தே. (௧௨)

வலிகெழுகுண்டர்க்குவைகைக்கரையன்றுவான்கொடுத்த
கலிகெழுதிண்டோட்கவுணியர்தீபன்கடலுடுத்த
வொலிதருநீர்வையகத்தையுறையிட்டதொத்ததிரு
மலிதருவார்பனியாம்படமாதினைவாட்டுவதே. (௧௩)

வாட்டுவர்தத்தந்துயரைவன்கேழலின்பின்புசென்ற
வேட்டுவர்கோலத்துவேதத்தலைவனைமெல்விரலாற்
றோட்டியல்காதனிவனென்றுதாளைதக்குச்சூழ்விசும்பிற்
காட்டியகன்றின்கழற்றிறமானவைகற்றவரே. (கங)

அவர்சென்றணுகுவர்மீள்வதின்றன்னையருகர்தம்மைத்
தவர்கின்றதண்டமிழ்ச்சைவசிகாமணிசண்பையென்னப்
பவர்கின்றநீள்கொடிக்கோபுரம்பல்கதிரோன்பரியைக்
கவர்கின்றகுலத்தொடுநின்றுதோன்றுங்கடிநகரே. (கச)

நகரங்கெடப்பண்டுதிண்டேர்மிசைநின்றுநான்மறைகள்
பகரங்கழலவனைப்பதினாறாயிரம்பதிக
மகரங்கிளர்கடல்வையத்துயர்கெடவாய்மொழிந்த
நிகரங்கிலிகலிக்காழிப்பிரானென்பர்நீணிலத்தே. (கரு)

நிலமேறியமருப்பிற்றிருமாலுநிலம்படைத்த
குலமேறியமலர்க்கோகனதத்தயனுங்கொழிக்குஞ்
சலமேறியமுடிதாள்கண்டிலர்தந்தைகாணவன்று
நலமேறியபுகழ்ச்சம்பந்தன்காட்டியநாதனையே. (கசு)

நாதனணிபள்ளிசூழ்நகர்காளமோக்கியஃதே
போதின்மலிவயலாக்கியகோணமர்பொற்புகலி
யோதநெடுங்கடல்வாருங்கயலொ[illegible]
காதினளவுமிளிர்கயலோசொல்லுகாரிகையே. (கஎ)

செம்மையினுனின்கழல்பரவாதுகண்டார்க்கிவரோர்
வன்மையனேயென்னும்வண்ணநடித்துவிழுப்பொருளோ
டிம்மையில்யானெய்துமின்பங்கருதித்திரிதருமத்
தன்மையினேற்குமருளுதியோசொல்லுசம்பந்தனே. (கஅ)

பந்தாரணிவிரற்பங்கயக்கொங்கைப்பவளச்செவ்வாய்க்
கொந்தார்நறுங்குழற்கோமளவல்லியைக்கூறருஞ்சீர்
நந்தாவிளக்கினைக்கண்டதுநானெப்பொழுதுமுன்னுஞ்
சந்தாரகலத்தருகாசனிதன்றடவரையே. (ககூ)

வரைகொண்டமாமதிற்சண்பைத்தலைவனைவாழ்த்தலர்போ
னிரைகொண்டுவானோர்கடைந்ததினஞ்சநிகழக்கொலா
நுரைகொண்டுமெய்ப்பரந்துள்ளஞ்சுழலநொந்தோரிரவுந்
திரைகொண்டலமருமிவ்வகன்ஞாலந்தெறிகடலே. (௨௦)

கடலன்னபொய்ம்மைகள்செய்யினும்வெய்யகலிநரகத்
திடநமனேவுதற்கெவ்விடத்தானிருஞ்செந்நெல்மாற்
றிடமன்னுமாமதிற்சண்பைத்தலைவன்செந்தாமரையின்
வடமன்னுநீண்முடியானடிப்போதவைவாழ்த்தினமே. (௨௧)

வாழ்த்துவதெம்பரமேயாகுமந்தத்துறையமுந்தி
ராழ்ந்தியகாலத்துமாழாதவரன்சேவடியே
யேத்தியஞானசம்பந்தற்கிடமிசைத்தும்பிகொம்பர்க்
காத்திகழ்கேதகம்போதகமீனுங்கழுமலமே. (௨௨)

மலர்பயில்வாட்கண்ணிகேள்கண்ணிநீண்முடிவண்ணமலப்
பலர்பயில்கீர்த்திக்கவுணியர்தீபன்பகைவரென்னத்
தலைபயில்பூம்புனங்கொய்திடுமேக்கனியார்புலம்ப
வலர்பயிலாமுன்பறித்தனமாகிலரும்பினையே. (௨௩)

அரும்பினவன்பில்லையர்ச்சனையில்லையரனெறியே
விரும்பினமாந்தர்க்குமெய்ப்பணிசெய்கிலம்பொய்க்கமைந்த
விரும்பினவுள்ளத்தினேற்கெங்ஙனேவந்துநேர்பட்டதாற்
கரும்பனநீள்வயல்சூழ்காழிநாதன்கழலடியே. (௨௪)

அடியாலலர்மிதித்தாலரத்தம்பில்கமிர்தமென்றிக்
கொடியாளுடம்பின்னடந்ததெவ்வாறலர்கோகனதக்
கடியார்நறுங்கண்ணிஞானசம்பந்தன்கருதலர்சேர்
வெடியார்விடுவெம்பரற்சுரநாறுவியன்கானத்தே. (௨௫)

சுரபுரத்தார்தந்துயருக்கிரங்கிச்சுரர்கடங்கள்
பரபுரத்தார்தந்துயர்கண்டருளும்பரமன்மன்னு
மரபுரத்தானடியெய்துவனென்பதவனடிசேர்
சிரபுரத்தானடியாரடியேனென்னுந்திண்ணனவே. (௨

திண்ணனவார்சென்றநாட்டிடையில்லைகொறீந்தமிழோர்
கண்ணெனவோங்குங்கவுணியர்தீபன்கைபோற்பொழிந்து
விண்ணினவாய்முல்லைமெல்லரும்பீனமற்றியாமெலிய
வெண்ணின்னாள்வழுவாதிரைத்தோடியெழுமுகிலே. (௨௭)

எழுவாண்மதியால்வெதுப்புண்டலமந்தெழுந்துவிம்மித்
தொழுவாடனக்கின்றருளுங்கொலாந்தொழுநீரவைகைக்
குழுவாயெதிர்ந்தவுறிகைப்பறிதலைக்குண்டர்தங்கள்
கழுவாவுடலங்கழுவினவாக்கியகற்பகமே. (௨௮)

கற்பாநறவமணிகொழித்துந்துமலைச்சிலம்பா
நற்பாமொழியெழின்ஞானசம்பந்தன்புறவமன்ன
விற்பாநுதலிதன்மென்முலையின்னிளஞ்செவ்விகண்டிட்
டிற்பாவிடும்வண்ணமெண்ணுகின்றாளம்மவெம்மனையே. (௨௯)

எம்மனையாயெந்தையாயென்னையாண்டென்றுயர்தவிர்த்த
செம்மலர்நீண்முடிஞானசம்பந்தன்புறவமன்னீர்
வெம்முனைவேலென்னவென்னமிளிர்ந்தவெளுத்தரிபோன்
றும்மனவோவல்லவோவந்தெனுள்ளத்தொளிர்வனவே. (௩௦)

ஒளிறுமணிப்பணிநாட்டுமுலகத்துமும்பருள்ளும்
வெளிறுபடச்சிலநிற்பதுண்டேமிண்டிமீனுகளு
மளறுவயற்சண்பைநாதனமுதப்பதிகமென்னுங்
களிறுவிடப்புகுமேற்றொண்டர்பாடுங்கவிதைகளே. (௩௧)

கவிக்குத்தகுவனகண்ணுக்கினியனகேட்கிலின்பஞ்
செவிக்குத்தகுவனசிந்தைக்குரியனபைந்தரள
நவிக்கட்சிறுமியர்முற்றின்முகந்துதஞ்சிற்றிற்றொறுங்
குவிக்கத்திரைபரக்குங்கொச்சைநாதன்குரைகழலே. (௩௨)

கழல்கின்றவைங்கணையந்தியுமன்றிலுங்கால்பரப்பிட்
டுழல்கின்றதென்றலும்வந்திங்கடர்ப்பவன்றாயிழைக்காச்
சுழல்கின்றநஞ்சந்தணித்தவன்றன்னைத்தொடர்ந்துபின்போ
யுழல்கின்றநெஞ்சமிங்கென்றோவினியின்றுறுகின்றதே. (௩௩

உறுகின்றவன்பினொடொத்தியதாளமுமுள்ளுருகிப்
பெறுகின்றவின்பம்பிறைநுதன்முண்டமுங்கண்டவரைத்
தெறுகின்றவாறென்னசெய்தவமோவந்தென்சிந்தையுள்ளே
றுகின்றபாதன்கழுமலம்போலுந்துடியிடைக்கே. (௩௪)

இடையுமெழுதாதொழியலுமாமினவண்டுகளின்
புடையுமெழுதிலும்பூங்குழலொக்குமப்பொன்னனையா
ணடையுநகையுந்தமிழாகரன்றன்புகலிநற்றே
ணடையுமொழியுமெழுதிடிற்சாலவதிசயமே. (௩௫)

மேனாட்டமரர்தொழவிருப்பாரும்வினைப்பயன்க
டாநாட்டருநரகிற்றளர்வாருந்தமிழ்தங்கள்
கோனாட்டருகர்குழாம்வென்றகொச்சையர்கோன்கமலப்
பூநாட்டடிபணிந்தாருமல்லாதபுலையருமே. (௩௬)

புலையடித்தொண்டனைப்பூசுரனாக்கிப்பொருகயற்கண்
மலைமடப்பாவைக்குமாநடமாடுமணியையென்றன்
றலையிடைப்பாதனைக்கற்றாங்குரைத்தசம்பந்தனென்று [லே.
முலையிடைப்பொன்கொண்டு சங்கிழந்தாளொன்றன்மொய்குழ

குழலியலின்கவிஞானசம்பந்தன்குரைகழல்போற்
கழலியல்பாதம்பணிந்தேனுனையுங்கதிரவனே
தழலியல்வெம்மைதணித்தருணீதணியாதவெம்மை
யழலியல்கானடந்தாள்வினையேன்பெற்றவாரணங்கே. (௩௮)

அணங்கமர்யாழ்முரித்தாண்பனைபெண்பனையாக்கியமண்
கணங்கழுவேற்றிக்கடுவிடந்தீர்த்துக்கதவடைத்துப்
பிணங்கலைநீரெதிரோடஞ்செலுத்தினவெண்பிறையோ
டிணங்கியமாடச்சிரபுரத்தான்றனிருந்தமிழே. (௩௯)

இருந்தண்புகலிகோலக்காவெழிலாவடுதுறைசீர்
பொருந்துமரத்துறைபோனகந்தாளநன்பொன்சிவிகை
யருந்திடவொத்தமுத்திசெயவேறவரனளித்த
பெருந்தகைசீரினையெம்பரமோநின்றுபேசுவதே. (௪0)

பேசுந்தகையதன்றேயின்றுமன்றுந்தமிழ்விரகன்
றேசமுழுதுமறைமறந்தாண்கெடச்செந்தழற்கை
யீசன்றிருவருளாற்[illegible]
காசின்மழைபொழிந்தானென்றிஞ்ஞாலங்கவின்பெறவே. ௪௧

பெறுவதுநிச்சயமஞ்சனெஞ்சேபிரமாபுரத்து
மறுவறுபொற்கழன்ஞானசம்பந்தனைவாழ்த்துதலால்
வெறியுறுகொன்றைமறியுறுசெங்கைவிடையெடுத்த
பொறியுறுபொற்கொடியெம்பெருமானமர்பொன்னுலகே. ௪௨

பொன்னார்மதில்சூழ்புகலிக்கரசையருக்கர்தங்க
டென்னாட்டரண்டசிங்கத்தினையெஞ்சிவனிவனென்
றந்நாள்குதலைத்திருவாய்மொழிகளருளிச்செய்த
வென்னனையைப்பணிவார்க்கில்லைகாண்கயமாலயமே. (௪௩)

மாலையொப்பாகும்பிறைமுன்புநின்றுமணிகுறுக்கி
வேலையைப்பாடணைந்தாங்கெழின்மன்மதன்விற்குனித்த
கோலையெப்போதும்பிடிப்பன்வடுப்படுகொக்கினஞ்சூழ்
சோலையைக்காழித்தலைவன்மலரின்றுசூடிடினே. (௪௪)

சூடுநற்சூர்த்தமிழாகரன்றன்பொற்சுடர்வரைத்தோள்
கூடுதற்கேசற்றகொம்பினைநீயுங்கொடும்பனைநின்
றூடுதற்கேயத்தனைக்குனையேயின்னையாடரவம்
வாடிடக்காருமறுவும்படுகின்றவாண்மதியே. (௪௫)

மதிக்கத்தகுநுதன்மாதொடுமெங்கண்மலையில்வைகித்
துதிக்கத்தகுசண்பைநாதன்சுருதிகடந்துழவோர்
மிதிக்கக்கமலமுகிழ்த்ததென்றேறுண்டுமிண்டிவரால்
குதிக்கக்குருகிரியுங்கொச்சைநாடுகுறுகுமினே. (௪௬)

குறுமனமுள்கலவாத்தமிழாகரன்கொச்சையன்ன
நறுமலர்மென்குழலாயஞ்சலெம்மூர்நகுமதிசென்
றுறுமனையொண்சுவரோவியக்கிள்ளைக்குறும்பதியிற்
சிறுமிகள்சென்றிருந்தங்கையைநீட்டுவர்சேயிழையே. (௪௭)

இழைவளராகத்துஞானசம்பந்தனிருஞ்சுருதிக்
கழைவளர்குன்றுகடத்தலுங்காண்பீர்கடைசியர்நீண்
முழைவளர்நண்டுபடத்தடஞ்சாலிமுத்துக்கிளைக்கு
மழைவளர்நீள்குடுமிப்பொழில்சூழ்ந்தவள்வயலே. (௪௮)

வயலார்மருகற்பதிதன்னில்வாளரவாற்கடியுண்
டயலாவிழுந்தவவனுக்கிரங்கியறிவழிந்த
கயலார்கருங்கண்ணிதன்றுயர்தீர்த்தகருணைவெள்ளப்
புயலார்தருகையினனென்னத்தோன்றிடும்புண்ணியமே. (௪௯)

புண்ணியநாடுபுகுவதற்காகப்புலனடக்கி
யெண்ணியசெய்தொழினிற்பதெல்லாருமின்றியானெனக்கு
நண்ணியசெய்தொழின்ஞானசம்பந்தனைநந்தமர்நீர்க்
கண்ணியன்மாடக்கழுமலத்தானைக்கருதுவதே. (௫௦)

கருதத்தவவருளீந்தருண்ஞானசம்பந்தன்சண்பை
யிரதக்கிளிமொழிமாதேகலங்கலிவருடலம்
பொருதக்கழுநிரையாக்குவனுந்தமர்போர்ப்படையேன்
மருதச்சினையிற்பொதும்பருளேறிமறைகுவனே. (௫௧)

மறைமுழங்குங்குழலார்கலிகாட்டவயற்கடைஞர்
பறைமுழங்கும்புகலித்தமிழாகரன்பற்றலர்போற்
றுறைமுழங்குங்கரிசிறிமடங்கல்சுடர்ப்பளிங்கி
னறைமுழங்கும்வழிநீவரிற்சாலவரும்பழியே. (௫௨)

பழிக்கேதகுகின்றதின்றிப்பிறைபல்கதிர்விழுந்த
வழிக்கேதிகழ்தருசெக்கரைக்கொச்சைவயவரென்று
மொழிக்கேவிரும்பிமுளரிக்கலமருமோவியர்தங்
கிழிக்கேதருமுருவத்திவள்வாட்டிடக்கிள்கின்றதே. (௫௩)

கிளரிக்குன்றத்தரவமுமிழ்ந்தகிளர்மணியின்
வாளரிக்கும்வைகைமாண்டனரென்பர்வயற்புகலித்
தாளரிக்கும்மரியானருள்பெற்றபரசமய
கோளரிக்குங்கிராத்தமிழ்நாட்டுள்ளகுண்டர்களே. (௫௪)

குண்டகழ்சூழ்தருகொச்சைத்தலைவன்றன்குன்றகஞ்சேர்
வண்டகமென்மலர்வல்லியன்னீர்வரிவிற்புருவக்
கண்டகவாளிபடப்புடைவீழ்செங்கலங்கலொடும்
புண்டகக்கேழல்புகுந்ததுண்டோநுங்கள்பூம்புனத்தே. (௫௫)

புனத்தெழுகைம்மதக்குன்றமதாயங்கொர்புண்கலையாய்
வனத்தெழுசந்தனப்பைந்தழையாய்வந்துவந்தடியேன் [ள்
மனத்தெழுபொற்கழன் ஞானசம்பந்தன்வண்கொச்சையன்ன
கனத்தெழுகொங்கைகளாயல்குலாய்த்திவர்கட்டுரையே. ௫௬

கட்டதுவேகொண்டுகள்ளுண்டுநுங்கைகளாற்சுணங்கை
யிட்டதுவேயன்றியெட்டனைத்தானிவளுள்ளுறுநோய்
விட்டதுவேயன்றிவெங்குருநாதன்றன்பங்கயத்தின்
மட்டவிழ்தார்கொண்டுசூட்டுமின்பேதைமகிழ்வுறவே. (௫௭)

உறவும்பொருளுமொண்போகமுங்கல்வியுங்கல்வியுற்ற
துறவுந்துறவிப்பயனுமெனக்குச்சுழிந்தபுனற்
புறவும்பொழிலும்பொழில்சூழ்பொதும்புந்ததும்பவண்டி
னறவும்பொழிலெழிற்காழியர்கோன்றிருநாமங்களே. (௫௮)

நாமுகந்தேத்தியஞானசம்பந்தனைநண்ணலர்போ
லேமுகவெஞ்சரஞ்சிந்திவல்லிஞ்சியிடிபடுக்கத்
தீமுகந்தோன்றிகடோன்றத்தளவமுகையரும்பக்
காமுகம்பூமுகங்காட்டிநின்றூர்த்தனகாரினமே. (௫௯)

காரங்கணைபொழிற்காழிக்கவுணியர்தீபனல்லூர்ச்
சீரங்கனைநற்பெருமணந்தன்னிற்சிவபுரத்து
வாரங்கணைகொங்கைமாதொடும்புக்குறும்போதுவந்தா
ராரங்கொழிந்தனர்பெற்றதல்லாலவ்வரும்பதமே. (௬0)

அரும்பதமாக்குமடியரொடஞ்சலித்தார்க்கரிய
பெரும்பதமெய்தலுற்றீர்வந்திறைஞ்சுமின்பேரரவம்
வரும்பதநான்மறைக்காழித்தலைவன்மலர்க்கமலத்
தரும்பதஞானசம்பந்தனென்னுனைதன்றாளிணையே. (௬௧)

தாளின்சரணந்தருஞ்சண்பைநாதன்றரியலர்போற்
கேளின்மலங்கவிலங்கேபுகுந்திடுங்கெண்டைகளும்
வாளுந்தொலையமதர்த்திருகாதினளவும்வந்தா
ளுங்கருங்கண்ணிமின்புரியாளைவைத்தமென்னகையே. (௬௨)

நகுகின்றமுல்லைநண்ணாரெரிகண்டத்தவர்கவர்ந்த
மிகுகின்றநன்னிதிகாட்டினகொன்றைவிரவலரூர்
புகுகின்றதீயெனப்பூத்தனதோன்றிபுறவமன்கைத்
தகுகின்றகோடல்களன்பரின்றெய்துவர்கார்மயிலே. (௬௩)

மயிலேந்தியவள்ளறன்னையளிப்பமதிபுணர்ந்த
வெயிலேந்தியசண்பைநாதனுலகத்தெதிர்ப்பவர்யார்
குயிலேந்தியபொழிற்கொங்கேந்தியகொம்பினம்புகுதீஇ
யயிலேந்தியமலர்க்கண்டுளையவந்தவண்ணலுக்கே. (௬௪)

அண்ணன்மணிவளைத்தோளருகாசனிசண்பையன்ன
பெண்ணினமிர்தநல்லாள்குழறூற்றம்பெடையொடும்பூஞ்
சுண்ணந்துதைந்தவண்டேகண்டதுண்டுகொறாங்கொலிநீர்த்
தண்ணம்பொழிலெழிற்காசினிபூந்தமென்றூகளே. (௬௫)

தாதுகற்றேய்த்தநஞ்சன்றுசியார்சடலம்படுத்துத்
தூதையிற்சிக்கங்காஞ்சேர்த்துவாளாருழக்குகின்றீர்
போதியிற்புத்தர்கள்வம்மின்புகலியர்கோனன்னநாட்
காதியிட்டேற்றுங்கழுத்திறம்பாடிக்களித்திடவே. (௬௬)

களியுறுதேன்றூர்க்கவுணியர்தீபன்கருதலர்போல்
வெளியுறுஞாலம்பகலிழந்தால்விரையார்கமலத்
தளியுறுமென்மலர்த்தாதளைந்தாழியமைப்பவருந்
துளியுறுவாடையிதாமடமானைத்துவள்விப்பதே. (௬௭)

தேறும்புனற்றில்லைச்சிற்றம்பலத்துச்சிறந்துவந்துள்
ளூறுமமிர்தைப்பருகிட்டெழுவதொருட்களிப்புக்
கூறும்வழிமொழிதந்தெனைவாழ்வித்தவன்சொற்பொருட்
றேறுமலங்கற்றமிழாகரனென்னுமென்னிதியே. (௬௮)

நிதியுறுவாரறனின்பம்வீடெய்துவரென்னவேதந்
துதியுறுநீள்வயற்காழியர்கோனைத்தொழாரினைய
நதியுறுநீர்தெளித்தஞ்சலெனவண்ணலன்றேவெறு
மதியுறுவாணுதல்பாதம்பணிந்தனண்மன்னனையே. (சுகூ)

மன்னனங்கனைசெந்தமிழாகரன்வெற்பில்வந்தொருவ
ரன்னங்களஞ்சன்மினென்றடர்வேழத்திடைவிலங்கிப்
பொன்னங்கலைசாவகையெடுத்தாற்கிவள்பூணழுந்தி
யின்னந்தழும்புளவாம்பெரும்பாலுமவ்வேந்தனுக்கே. (எ0)

ஏந்துமுலக்குறுவீரெழினீலக்கற்குமின்பப்
பூந்தண்புகலூர்முருகற்குந்தோழனைப்போகமார்ப்பைக்
காந்துங்கனலிற்குளிர்படுத்துக்கடற்கூடலின்வாய்
வேந்தின்றுயர்தவிர்த்தானையெப்போதும்விரும்புமினே. (எக)

விரும்பும்புதல்வனைமெய்யரிந்தாக்கியவின்னமிர்த
மரும்பும்புனற்சடையாயுண்டருளென்றடிபணிந்த
விரும்பின்சுடர்க்களிற்றுன்சிறுத்தொண்டனையேத்துதிரேற்
சுரும்பின்மலர்த்தமிழாகரன்பாதத்தொடர்வெளிதே. (எஉ)

எளிவந்தவாவெழிற்பூவரைஞாண்மணித்தார்சழுங்கத்
துளிவந்தகண்பிசைந்தேங்கலுமெங்களரன்றனையாங்
கிளிவந்தசொல்லிபொற்கிண்ணத்தின்ஞானவமிர்தளித்த
வளிவந்தபூங்குஞ்சியின்சொற்சிறுக்கன்றனருளே. (எங)

அருளுந்தமிழாகரனின்னலங்கறந்தென்பெயரச்
சுருளுங்குழலியற்கிக்கிலையேமுன்புதுங்குகாத்
துருளுங்களிற்றினொடோட்டருவானையருளியன்றே
மருளின்மொழிமடவாள்பெயரென்கண்வருவிப்பதே. (எச)

வருவாருருவின்வழிவழிவைத்தவனமருந்துந்
திருவாரிருந்தசெழுநகர்ச்செவ்வித்திருவடிக்கா
டருவான்றமிழாகரன்கரம்போற்சலம்வீசக்கண்டு
வெருவாவணங்கொண்டல்கண்மிண்டிவானத்துமின்னியவே( )

மின்னார்குடுமிநெடுவெற்பகங்கொங்கில்வீழ்பனிநோய்
தன்னூர்வழிகெட்டழிந்தமைசொல்லுவர்காணிறையே
மன்னார்பரிசனத்தோர்மேற்புகலுமெவர்க்குமிக்க
நன்னாவலர்பெருமானருகாசனிநல்கிடவே. (௭௬)

நல்கென்றடியிணைபணியார்சண்பைநம்பெருமான்
பல்கும்பெரும்புகழ்பாடகில்லார்சிலர்பாழ்க்கிறைத்திட்
டொல்குமுடம்பினராய்வழிதேடிட்டிடறிமுட்டிப்
பில்குமிடமறியார்கெடுவாருறுபேய்த்தனமே. (௭௭)

தனமேதருபுகழ்ச்சைவசிகாமணிதன்னருள்போல்
மனமேபுகுந்தமடக்கொடியேமலர்மேலிருந்த
வனமேயமிர்தக்குமுதச்செவ்வாயுங்களாயமென்னா
மினமேபொலியவண்டாடெழிற்சோலையுளெய்துகவே. (௭௮)

உகட்டித்தமோட்டுவராலினமேதிமுலையுரிஞ்ச
வகட்டிற்சொரிபாறடந்நிறைகொச்சைவயத்தரசைத்
தகட்டிற்றிகழ்மணிப்பூண்டமிழாகரன்றன்னையல்லாற்
பகட்டிற்பொலியினும்வேண்டேனொருவரைப்பாடுதலே. (௭௯)

பாடியசெந்தமிழாற்பழங்காசுபரிசில்பெற்ற
நீடியசீர்த்திருஞானசம்பந்தனிறைபுகழா
னேடியபூந்திருநாவுக்கரசோடெழின்மிழலைக்
கூடியகூட்டத்தினாலுளதாய்த்திக்குவலயமே. (௮௦)

வலயத்திணிதோண்மிசைமழுவேற்றிமணப்புறத்து
நிலையத்தனைப்பொழுதோகண்டதாரணிநீதிகெட்டார்
குலையக்கழுவின்குழுக்கண்டவன்றிகழ்கொச்சையன்ன
சிலையொத்தவாணுதன்முன்போன்மலர்கதிருக்கண்களே. (௮௧)

கண்ணார்திருநுதலோன்கோலக்காவிற்கரநொடியாற்
பண்ணார்தரப்பாடுசண்பையர்கோன்பாணிநொந்திடுமென்
றெண்ணாவெழுத்தஞ்சுமிட்டபொற்றாளங்களீயக்கண்டு
மண்ணார்சிலர்சண்பைநாதனையேத்தார்வருந்துவதே. (௮௨)

வருந்துங்கொலாங்கழன் மண்மிசையேகிடினென்றுமென்றூர்
திருந்தும்புகழ்ச்சண்பைஞானசம்பந்தற்குச்சீர்மணிகள் [த்
பொருந்துஞ்சிவிகைகொடுத்தனன்காண்புணரித்திகழ்நஞ்
சருந்தும்பிரானம்மரத்துறைமேயவரும்பொருளே. (௮௩)

பொருளெனவென்னைத்தன்பொற்கழல்காட்டிப்புகுந்தெனக்கி
கருளியசீர்த்திருஞானசம்பந்தனருளிலர்போல் [ங்
வெருளினமானின்மென்னோக்கியைவிட்டுவிழுந்திரியின்
இருளினையாதரித்தன்னன்றுசாலவென்சிந்தனைக்கே. (௮௪)

சிந்தையைத்தேனைத்திருவாவடுதுறையுட்டிகழு
மெந்தையைப்பாடலிசைத்துத்தொலையாநிதியமெய்தித்
தந்தையைத்தீத்தொழின்மூட்டியகோன்சரண்சார்விலரே
நிந்தையைப்பெற்றொழியாதிரந்தேகரநீட்டுவரே. (௮௫)

நீட்டுவரோதத்தொடேறியசங்கநெகுமுளரித்
தோட்டுவெண்முத்தஞ்சொரிசண்பைநாதற்றொழாதவரில்
வேட்டுவர்வேட்டதண்ணீரினுக்குண்ணீருணக்குழித்த
காட்டுவரூறல்பருகுங்கொலாமெங்கணங்குழையே. (௮௬)

குழைக்கின்றகொன்றைபொன்போல்மலராநுங்கூட்டமெல்லா
மழைக்கின்றகொண்டலியம்பொன்னிலையகன்றூர்வரவு [த்
பிழைக்கின்றதுகொலென்றஞ்சியொண்சண்பைப்பிரான்புறவ
திழைக்கின்றகூடன்முடியவெண்ணுதவிளங்கொடிக்கே. (௮௭)

கொடித்தேரவுணர்குழாமனலூட்டியகுன்றவில்லி
யடித்தேர்கருத்தினருகாசனியையணியிழையார்
முடித்தேர்கமலங்கவர்வான்முரிபுருவச்சிலையால்
வடித்தேர்நயனக்கணையிணைகோத்துவளைத்தனரே. (௮௮)

வளைபடுதண்கடற்கொச்சைவயவன்மலர்க்கழற்கே
வளைபடுநீண்முடிவார்புனலூரன்றனீரிலங்கு
வளைபடுகண்ணியர்தம்பொதுத்தம்பலநாறுமிந்த
வளைபடுகிங்கிணிக்கான்மைந்தன்வாயின்மணிமுத்தமே. (௮௯)

முத்தன்வெண்ணகையார்மயன்மாற்றிமுறைவழுவா
தெத்தனைகாலமின்றேத்துமவரினுமென்பணிந்த
பித்தனையெங்கள்பிரானையணைவதெளிதுகண்டா
யத்தனைஞானசம்பந்தனைப்பாதமடைந்தவர்க்கே. (க0)

அடைந்ததுமாமறைக்காடர்தங்கோயிற்கதவினையன்
றடைத்ததுபாணன்றன்யாழின்றொலியையருகலிடம்
றுடைத்ததுதோணிபுரத்துக்கிறைவன்சடையோரளியாய்
படைத்ததுதண்மையைநள்ளாற்றரசபணித்திடவே. (கக)

பணிபடுநுண்ணிடைபாகம்பொருபலகாதமென்று
தணிபடுமின்சொற்களாற்றமிழ்த்தேற்றுத்தழுவமிழ்கான்
மணிபடுபொற்கழன்ஞானசம்பந்தன்மருவலர்போற்
றுணிபடுவேலன்னகண்ணியென்றேவந்துதோன்றியதே. கஉ

தோன்றறன்றேடுடனேயசுந்தரப்பூண்முலையை
யின்றவரேயிந்தவெந்திழையாரவரிவ்வளவில்
வான்றவர்குழுந்தமிழாகரன்றன்வட்டவரையே
போன்றபொன்மாடக்கழுமலநாடுபொருந்துவரே. (கங)

பொருந்திடுஞானத்தமிழாகரன்பதிபொற்புரிசை
திருந்தியதோணிபுரத்துக்கிறைவன்றிருவருளாற்
கருந்தடநீரெழுகாலையிற்காடுகழுமலமென்
றிருந்திடவரமென்றுவானவர்பரவியியம்பியதே. (கச)

இயலாதனபலசிந்தையராயியலுங்கொலென்று
முயலாதனவேமுயன்றுவன்மோகக்குழியழுந்திச்
செயலார்வரைமதிற்காழியர்கோன்றிருநாமங்கருதாக்
கயலாரெனப்பலகாலங்கள்போக்குவராதர்களே. (கரு)

ஆதரவும்பயப்பும்மிவளெய்தினளென்றயலார்
மாதரவுஞ்சொல்லியென்னைநகுவதுமாமறையின்
றோதரவம்பொலிகாழித்தமிழாகரனென்றோ
தீதரவம்படவன்னையென்றேபலசெப்புவதே. (கசு)

செப்பியவென்னதவமுயன்றேனல்லசெந்தமிழா
லொப்புடைமாலைத்தமிழாகரனையுணர்வுடையோர்
கற்புடைவாய்மொழியேத்தும்படிகதறிட்டிவர
மற்படுதொல்லைக்கடல்புடைசூழ்தருமண்ணிடையே. (கூஎ)

மண்ணிற்றிகழ்சண்பைநாதனைவாதினில்வல்லமணைப்
பண்ணைக்கழுவிற நிலைவந்தெம்பந்தவினையறுக்குங்
கண்ணைக்கதியைத்தமிழாகரனையெங்கற்பகத்தைத்
திண்ணற்றெருடையற்கவுணியர்தீபனைச்சேர்ந்தனமே. (கூஅ)

சேரும்புகழ்த்திருஞானசம்பந்தனையானுரைத்த
பேருந்தமிழ்ப்பாவிவைவல்லவர்பெற்றவின்புலகங்
காருந்திருமிடற்றாயருளாயென்றுகைதொழுவர்
நீருமலருங்கொளாநெடுமாலும்பிரமனுமே. (கூகூ)

பிரமாபுரம்வெங்குருசண்பைதோணிபுகலிகொச்சை
சிரமார்புரநற்புறவந்தராய்காழிவேணுபுரம்
வரமார்பொழிற்றிருஞானசம்பந்தன்பதிக்குமிக்க
பரமார்கழுமலம்பன்னிருநாமமிப்பாரகத்தே. (க00)

பாரகலத்துன்பங் கடந்தமர ராற்பணிய
மோகலம்பெற்றுவு மின்றுதாற் - காரகிலின்
றாமங்கமழ்மாடத் தோணிபுரத்தலைவ
னுமஞ்செவிக்கிசையா னாள்.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

ஆளுடையபிள்ளையார்

# திருச்சண்பைவிருத்தம்.

---

பாலித்தெழிறங்குபார்முகமுய்யப்பரிதலைமேயார்
மாலுற்றழுந்தவஞ்சரித்தோன்மணிநீர்க்கமலத்
தாலித்தலர்மிசையன்னநடப்பவணங்கிதென்றுச்
சாலித்தலைபணிசண்பையர்காவலன்சம்பந்தனே. (௧)

கொங்குதங்குங்குஞ்சிகூடாப்பருவத்துக்குன்றாவில்லி
பங்குதங்கும்மங்கைதன்னருள்பெற்றவன்பைம்புனரிப்
பொங்குவங்கப்புனல்சேர்த்தபுதுமணப்புன்னையின்கீழ்ச்
சங்குதங்கும்வயற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௨)

குவளைக்கருங்கட்கொடியிடைதன்பங்கனிறையவனுவ
துவளத்தொடுவிடந்தீர்த்ததமிழின்றொகைசெய்தவன்
றிவளக்கொடிக்குன்றமாளிகைச்சூளிகைச்சென்னியின்வாய்த்
தவளப்பிறைதங்குசண்பையர்காவலன்சம்பந்தனே. (௩)

கள்ளம்பொழினனிபள்ளித்தடங்கடமாக்கியஃதே
வெள்ளம்பணிநெய்தலாக்கியவித்தகன்வெண்குருகு
புள்ளொண்டவளப்புரிசங்கொடாலக்கயலுகளுந்
தள்ளுந்தடம்புனற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௪)

ஆறதேறுஞ்சடையானருண்மேவவவனியர்க்கு
வீறதேறுந்தமிழால்வழிகண்டவன்மென்கிளிமாந்
தேறல்கோதித்தாறுசண்பகந்தாவிச்செழுங்கமுகின்
குறதேறும்பொழிற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௫)

அந்தமுந்தும்பிறவித்துயர்தீரவரனடிக்கே
பந்தமுந்துந்தமிழ்செய்தபராபரன்பைந்தடத்தேன்
வந்துமுந்திநந்தமுத்தங்கொடுப்பவயற்கயலே
சந்தமுந்தும்பொழிற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௬)

புண்டலைக்குஞ்சரப்போர்வையர்கோயிற்புகவடைக்கு
மொண்டலைத்தண்டமிழ்க்குண்டாசனியும்பர்பம்பிமின்னுங்
கொண்டலைக்கண்டுவெண்டாடப்பெடையொடுங்கொக்குறங்குந்
தண்டலைக்குண்டகழ்ச்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௭)

எண்டலைக்குந்தலைவன்கழல்சூடியெனுள்ளம்வெள்ளங்
கண்டலைப்பத்தன்கழறந்தவன்கதிர்முத்தநத்தம்
விண்டலைப்பத்தியிலோடும்விரவிமிளிர்பவளந்
தண்டலைக்குங்கடற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௮)

ஆறுமண்டப்பண்டுசெஞ்சொனடாத்தியமண்முழுதும்
பாறுமண்டக்கண்டசைவசிகாமணிபைந்தடத்த
சேறுமண்டச்சங்குசெங்கயறேமாங்கனிசிதறிச்
சாறுமண்டும்வயற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௯)

விடந்திளைக்கும்மரவல்குன்மென்கூந்தல்பெருமணத்தின்
வடந்திளைக்குங்கொங்கைபுல்கியமன்மதன்வண்கதலிக்
கடந்திளைத்துக்கமுகீர்புல்கியொல்கிக்கரும்புரிஞ்சித்
தடந்திளைக்கும்புனற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௧௦)

பாலித்தகொங்குகுவளைகள்ளம்பொழில்கீழ்ப்பரந்து
வாலிப்பவாறதேறுங்கழனிச்சண்பையந்தமுந்து
மேலிட்டபுண்டலைக்குஞ்சரத்தெண்டலைக்குந்தலைவன்
கோலிட்டவாறுவிடந்திளைக்கும்மரவத்திடையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

ஆளுடையபிள்ளையார்

# திருமும்மணிக்கோவை.

---

## ஆசிரியப்பா.

திங்கட்கொழுந்தொடு பொங்கரவுந்நீர்க்குழூஉம்
கங்கைப்பேரியாற்றுக் கடுவரக்கலுழியி
னிதழியின்செம்பொ னிருகரைசிதறிப்
புதுமெருக்குமலர்த்தும் புரிபுன்சடையோன்
திருவருள்பெற்ற திருப்பிறப்பாளன்
முத்தீவேள்வி நான்மறைவளர
வைவேள்வியர்த்த வறுதொழிலாள
னேழிசையரசை யெண்டிசையறியத்
தண்டப்படுத்த [illegible]
காழிநாடன் கவுணியர்தலைவன்
மாமறைநோக்கி மலைமகள்புதல்வன்
திருத்தப்பாடல் திரு[illegible]
கடுந்துயருட்புகக் கைவிளிச்சுழம்பிந
நெடும்பிறவிக்கட னீந்துவதரிதே. (க)

## வெண்பா.

அரியோடுநான்முகத்தோ னாதிசுரர்க்கெல்லாந்
தெரியாமைசெந்தழலாய் நின்ற - வொருவன்சீர்
தன்றலையின்மேற்றரித்த சம்பந்தன்றாளி[illegible]
னென்றலையின்மேலிருக்க வென்று. (உ)

## கட்டளைக்கலித்துறை.

என்றுமடியவருள்ளத்திருப்பனவிவ்வுலகோர்
நன்றுமலர்கொடுதூவித்துதிப்பனநல்லசங்கத்
தோன்றும்புலவர்கள்யாப்புக்குரியனவொண்கலியைப்
பொன்றுங்கவுணியன்சைவசிகாமணிபொன்னடியே.(௩)

## ஆசிரியப்பா.

அடுசினக்கடகரி யதுபடவுரித்த
படர்சடைக்கடவுடன் றிருவருளதனாற் பிறந்தது
கழுமலமென்னுங் கடிநகரதுவே வளர்ந்தது
தேங்கமழ்வாவிச் சிலம்பரையன்பெறு
பூங்குழன்மாதிடு போனகமுண்டே பெற்றது
குழகனைப்பாடிக் கோலக்காப்புக்
கழகுடைச்செம்பொற் றாளமவையே தீர்த்தது
தாதமர்மருகற் சடையனைப்பாடிப்
பேதுறுபெண்ணின் கணவனைவிடமே யடைத்த
தரைசோதிசையா வணிமறைக்காட்டிற்
குரைசேர்குடுமிக் கொழுமணிக்கதவே யேறிற்
றத்தியுமாவுந் தவிரவரத்துறை
முத்தின்சிவிகை முன்னாட்பெற்றே பாடிற்
றருமறையோத்தூ ராண்பனையதனைப்
பெருகிறமெய்தும் பெண்பனையாவே கொண்டது
பூவிடுமதுவிற் பொறிவண்டுழலு
மாவடுதுறையிற் பொன்னாயிரமே கண்ட
தறியொடுபீலி யொருகையிற்கொள்ளும்
பறிதலைச்சமணைப் பல்கழுமிசையே நீத்த
தமிழ்ச்சுவையேயறிந் தரனடிபரவுந்
தமிழ்ச்சுவையறியாத் தம்பங்களையே நினைந்த
தள்ளற்பழனக் கொள்ளம்பூதூ
ரிக்கரையோட மக்கரைச்செலவே மிக்கவ
ருணசம்பந்த மறுத்துயக்கொளவல
ஞானசம்பந்தனிஞ் ஞாலத்திடையே. (௪)

வெண்பா.

நிலத்துக்குமேலாறு நீடுலகத்துச்சித்
தலத்துக்குமேலேதா னென்பர் - சொலத்தக்க
சுத்தர்கள்சேர்காழிச் சுரன்ஞானசம்பந்தன்
பத்தர்கள்போய்வாழும் பதி. (ரு)

கட்டளைக்கலித்துறை.

பதிகம்பலபாடி நீடியபிள்ளைபரசமயத்
[illegible]ர்க்குக்காலனைவதரித்த
[illegible]
ரொதியம்பணைபோல்விழுவார[illegible]லுமோர்களே. (சு)

ஆசிரியப்பா.

கவளமாளிகைத் திவளுமியானையின்
கவுட்டலைக்கும்பத்
தும்பர்ப்பதணத் தம்புதந்திளைக்கும்
பெருவளந்தழீஇத் திருவளர்புகலி
விளங்கப்பிறந்த வளங்கொள்சம்பந்தன்
கருதியஞ்செவ்விச் சுருதியஞ்சிலம்பிற்
றேமருதினைவளர் காமருபுனத்து
மும்மதஞ்சொரியும் வெம்முகக்கைம்மா
மூரிமருப்பிற் சிரியமுத்துக்
கொடுஞ்சிலைவளைத்தே கொடுஞ்சரந்துரந்து
முற்படவந்த முயன்றங்குதவிசெய்
வெற்பனுக் கலது
சுணங்கணிமென்முலைச் சுரிகுழன்மாதினை
மணஞ்செயமதிப்பது நமக்குவன்பழியே. (எ)

வெண்பா.

பழியொன்றுமோராதே பாயிடுக்கிவாளா
கழியுஞ்சமண்கையர் தம்மை - யழியத்
துரந்தரங்கச்செற்றான் சுரும்பார்தாம்பாத
நிரந்தரம்போய்நெஞ்சே நினை. (அ)

கட்டளைக்கலித்துறை.

நினையாதரவெய்திமேகலைநெக்குவளைசரிவா
டனையாவவென்றின்றருளுதியேதடஞ்சாலிவயற்
கனையாவருமேதிகன்றுக்கிரங்கித்தன்கால்வழிபா
னனையாவருங்காழிமேவியசீர்ஞானசம்பந்தனே. (௯)

ஆசிரியப்பா.

தனமலிகமலத் திருவெனுஞ்செல்வி
விருப்பொடுதிளைக்கும் வீயாவின்பத்
தாடகமாட நீடுதென்புகலிக்
காமருகவினார் கவுணியர்தலைவ
பொற்பமர்தோள நற்றமிழ்விரக
மலைமகள்புதல்வ கலைபயிலுரவ நின்னது
பொங்கொளிமார்பிற் றங்கியதிருநீ
றுதரித்திறைஞ்சிய பேதையர்கையில்
வெள்வளைவாங்கிச் செம்பொன்கொடுத்தலிற்
பிள்ளையாவது தெரிந்ததுபிறர்க்கே. (௧௦)

வெண்பா.

பிறவியெனும்பொல்லாப் பெருங்கடலைநீந்தத்
துறவியெனுந்தோற்றோணி கண்டீர் - நிறையுலகிற்
பொன்மாலைமார்பன் புனற்காழிச்சம்பந்தன்
றன்மாலைஞானத் தமிழ். (௧௧)

கட்டளைக்கலித்துறை.

ஞானந்திரளையிலேயுண்டனையென்றுநாடறியச்
சோனந்தருகுழலார்சொல்லிடாமுன்சுரும்புகட்குப்
பானந்தருபங்கயத்தார்கொடுபடைச்சால்வழியே
கூனந்தருஞ்சங்குசூழ்காழிமேவியகொற்றவனே. (௧௨)

ஆசிரியப்பா.

அவனிதலநெரிய வெதிரெதிர்மலைஇச்
சொரிமதக்களிற்று மத்தகம்போழ்ந்து
செஞ்சேறுடிச் செல்வனவரியே யெஞ்சாப்
படவரவுச்சிப் பருமணிபிதுங்கப்

பிடரிடைப்பாய்வன பேழ்வாய்ப்புலியே யிடையிடைச்
செறியிருளுருவச் சேண்விசும்பதனிற்
பொறியெனவிழுவன பொங்கொளிமின்னே
யுறுசினவரையா லுந்தியகலுழிக்
கரையாலுழல்வன கரடியின்கணனே நிரையார்
பொருகடலுதைந்த சுரிமுகச்சங்கு
செங்கயல்கிழித்த பங்கயமலரின்
செம்மடனிறைய வெண்முத்துதிர்க்கும்
பழனக்கழனிக் கழுமலநாடன்
வைகையிலமணரை வாதுசெய்தறுத்த
சைவசிகாமணி சம்பந்தன்வெற்பிற்
சிறுகிடையவடன் பெருமுலைபுணர்வா
னெறியினில்வரலொழி நீமலையோனே. (௧௩)

வெண்பா.

மலைத்தலங்கண்மீதேறி மாதவங்கள்செய்து
முலைத்தலங்கணித்தாலு மூப்பர் - கலைத்தலைவன்
சம்பந்தற்காளாய்த் தடங்காழிகைகூப்பிந்
தம்பந்தந்தீராத தாம். (௧௪)

கட்டளைக்கலித்துறை.

தாமரைமாதவிசேறியநான்முகன்றன்பதிபோற்
காமருசீர்வளர்காழிநன்னுடன்கவித்திறத்து
நாமருமாதவர்போலழகிந்துநல்வில்லிபின்னே
நீர்மருவாதசுரந்தெங்ஙனேகுமெல்லரிவையே. (௧௫)

ஆசிரியப்பா.

இழைகெழுமென்முலை யிதழிமென்மலர்கொயத்
தழைவரவொசித்த தடம்பொழிலிதுவே காமர்
சுனைகுடைந்தேறித் துகிலதுபுனையநின்
றெனையுங்கண்டு வெள்கிடமிதுவே இனைதொறும்
பாய்கிளியிரியப் பையவந்தேறி
யாயவென்றிருக்கு மணிப்பரணிதுவே யீதே
யின்புறுசிறுசொல் லவைபலவியற்றி

யன்புசெய்தென்னை யாட்கொளுமிடமே பொன்புரை
தடமலர்க்கமலக் குடுமியிலிருந்து
நற்றெழில்புரியு நான்முகனுட்டைப்
புற்கடைகழீஇப் பொங்குசராவத்து
நெய்ச்சொரிப்பெற்ற முத்தீப்புகையா
லொடொறுமறைக்குஞ் சேடுறுகாழி
யெண்டிசைநிறைந்த தண்டமிழ்விரக
னலங்கலந்தோங்கும் விலங்கலின்மாட்டுப்
பூம்புனமதனிற் காம்பனதோளி
பஞ்சிற்றிருந்தடி நோவப்போயென்னை
வஞ்சித்திருந்த மணியறையிதுவே. (கசு)

வெண்பா.

வேழங்களெய்பவர்க்கு வில்லாவதிக்கால
மாழங்கடன்முத்தம் வந்தலைக்கு - நீள்வயல்சூழ்
வாய்ந்ததிவண்மாட மதிற்காழிக்கோன்சிலம்பிற்
சாய்ந்ததுவண்டழையோ தான். (கஎ)

கட்டளைக்கலித்துறை.

தழைக்கின்றசீர்மிகுஞானசம்பந்தன்றடமலைவா
யழைக்கின்றமஞ்ஞைக்கலந்தனகோடலம்பெய்திடுவா
னிழைக்கின்றதந்தரத்திந்திரசாபமின்னெண்ணமொன்றும்
பிழைக்கின்றதில்லைநற்றேர்வந்துதோன்றிற்றுப்பெய்வளையே.

ஆசிரியப்பா.

வளைகான்மந்தி மாமரப்பொந்தில்
விளைதேனுண்டு வேணுவின்றுணியாற்
பாறையிற்றுயில் பனைக்கைவேழத்தை
யுந்தியெழுப்பு மந்தண்சிலம்ப வஃதிங்
கென்னையரிங்கு வருவர்பலரே
யன்னைகாணி லலர்தூற்றும்மே பொன்னோர்
சிறுபறற்கரந்த விளிகுரற்கிங்கிணி
சேவடிபுல்லிச் சில்குரலியற்றி
யமுதுண்செவ்வா யருவிதூங்கத்
தாளம்பிரியாத் தடக்கையசைத்துச்

சிறுகூத்தியற்றிச் சிவனருள்பெற்ற
நற்றமிழ்விரகன் பற்றலர்போல
விடுங்கியமனத்தொடு மொடுங்கியசென்று
பரிதியுங்குடகடற் பாய்ந்தனன்
கருதிநிற்பதுபிழை கங்குலிப்புனத்தே. (௧௯)

வெண்பா.

தேம்புனமேயுன்னைத் திரிந்துதொழுகின்றேன்
வாம்புகழ்சேர்சம்பந்தன் மாற்றலர்போற் - றேம்பி
யழுதகன்றுளென்று தணிமலையர்வந்தாற்
றொழுதகன்றுளென்றுநீ சொல்லு. (௨௦)

கட்டளைக்கலித்துறை.

சொற்செறிசீர்கவிசெய்தன்றுவைகையிற்றொல்லமணர்
பற்செறியாவண்ணங்காத்தசம்பந்தன்பயில்சிலம்பிற்
கற்செறிவார்சுனைநீர்குடைந்தாடுங்கணங்குழையை
யிற்செறியாவணங்காத்திலைவாழியிரும்புனமே. (௨௧)

ஆசிரியப்பா.

புனலறவறந்த புன்முளிசாரற்
சினமலிவேடர் செஞ்சாமுரீஇப்
படுகலைக்குளம்பின் முடுகுநாற்றத்
தாடுமரவி [illegible]
பாடுதுகையின் பஞ்சாரங்கேட்டுக்
கள்ளியங்கவட்டிடைப் பள்ளிகொள்ளும்
பொறிவரிப்புறவே யுறவலைகாணீ நறைகமழ்
தேம்புனல்வாவித் திருக்கழுமலத்துப்
பையரவசைத்த தெய்வநாயகன்
றன்னருள்பெற்ற பொன்னணிக்குன்ற
மானசம்பந்த மண்மிசைத்துறந்த
ஞானசம்பந்தனை நயவார்கிளைபோல்
வினையேனிருக்கு மனைபிரியாத
வஞ்சிமருங்கு லஞ்சொற்கிள்ளை
யேதிலன்பின்செல விலக்காதொழிந்தனை
யாதலிற்புறவே யுறவலைநீயே. (௨௨)

வெண்பா.

அலைகடலின்மீதோடி யர்றாளையர்வீசும்
வலைகடலில்வந்தேறு சங்க - மலர்கடலை
வெண்முத்தவிழ்வயல்சூழ் வீங்குபுனற்காழியே
யொண்முத்தமிழ்பயந்தா னூர். (உரு)

கட்டளைக்கலித்துறை.

ஊரும்பசும்புரவித்தேரொளித்தொளிவிசும்பிற்
கூருமிருளொடுகோழிகண்டுஞ்சாகொடுவினையேற்
காருமுணர்ந்திலர்ஞானசம்பந்தனந்தாமரையின்
றுருந்தருகிலனெங்ஙனம்யான்சங்குதாங்குவதே. (உசு)

ஆசிரியப்பா.

தேமலிகமலப் பூமலிபடப்பைத்
தலைமுகடேறி யிளவெயிற்காயுங்
கவடிச்சிறுகாற் கர்க்கடகத்தைச்
சுவடிச்சியங்குஞ் சூனரிமுதுகைத்
துன்னியெழுந்து செந்நென்மோதுங்
காழிநாட்டுக் கவுணியர்குலத்தை
வாழத்தோன்றிய வண்டமிழ்விரகன்
றெண்டிரைக் கடல்வாய்க்
காண்டகுசெவ்விக் களிறுகளுகுத்த
முட்டைமுன்கவரும் பெட்டையங்குருகே
வாடையடிப்ப வைகறைப்போதிற்
றனிநீபோந்து பனிநீரொழுகக்
கூசிக்குளிர்ந்து பேசாதிருந்து
மேனிவெளுத்த காரணமுரையா
யிங்குத்தணந்தெய்தி னமரு
மின்னம்வந்திலரோ சொல்லிளங்குருகே. (உஎ)

வெண்பா.

குருகும்பணிலமுங் கூனந்துஞ்சேலும்
பெருகும்வயற்காழிப் பிள்ளை - யருகந்தர்
முன்கலங்கநட்ட முடைகெழுமியாலின்னம்
புன்கலங்கல்வைகைப் புனல். (உஅ)

## கட்டளைக்கலித்துறை.

புனமாமயில்சாயல்கண்டுமுன்போகாகிளிபிரியா
னமான்விழியொக்குமென்றுவிட்டேகாவிருநிலத்துக்
கனமாமதிற்காழிஞானசம்பந்தன்கடன்மலைவாய்த்
தினைமாதிவள்காக்கவெங்கேவிளையுஞ்செழுங்கதிரே. (உஎ)

## ஆசிரியப்பா.

கதிர்மதிநுழையும் படர்சடைமகுடத்
தொருத்தியைக்கரந்த விருத்தனைப்பாடி
முத்தின்சிவிகை முன்னாட்பெற்ற
வத்தன்காழி நாட்டுறையணங்கோ மொய்த்தெழு
தாமரையல்லித் தவிசிடைவளர்ந்த
காமருசெல்வக் கனங்குழையவளோ பீமருத்
தருவளர்விசும்பிற் றவநெறிகலக்கு
முருவளர்கொங்கை யுருப்பசிதானோ
வாருணக்கொம்போ மதனன்கொடியோ
வாரணியத்து ளருந்தெய்வமதுவோ
வண்டமர்குழலுங் கெண்டையங்கண்ணும்
வந்திமருக்குங் கிஞ்சுகவாயு
மெந்திளமுலையுங் காந்தளங்கையு
மோவியர்தங்க ளொண்மதிகாட்டும்
வட்டிகைப்பலகை வான்றுகிலிகையா
லியக்குதற்கரியதோ ருருவுகண்டென்னை
மயக்கவந்துதித்ததோர் வடிவிதுதானே. (உஅ)

## வெண்பா.

வடிக்கண்ணியாளையிவ் வான்சுரத்தினூடே
கடிக்கண்ணியானோடுங் கண்டோம் - வடிக்கண்ணி
மாம்பொழில்சேர்வைகை யமண்மலைந்தான்வண்காழிப்
பூம்பொழிலேசேர்ந்திருப்பார் புக்கு. (உகூ)

கட்டளைக்கலித்துறை.

குருந்துந்தரளமும்போல்வண்ணவெண்ணகைக்கொய்மலராள், பொருந்துந்திரள்புயத்தண்ணல்சம்பந்தன்பொற்றாமரைக் கா,வருந்துந்திரள்கொங்கை மங்கையைவாட்டினைவானகத்தே, திருந்துந்திரண்முகின்மூந்திவந்தேறுதிங்கட்கொழுந்தே. (௬௦

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை.

---

திருந்தியசீர்ச்செந்தா மரைத்தடத்துச்சென்றோ
ரிருந்தண்ளமேதி பாயப் - பொருந்திய
புள்ளிரியப்பொங்கு கயல்வெருவப்பூங்குவளைக்
கள்ளிரியச்செங்கழுநீர் கால்சிதையத் - துள்ளிக்
குருகிரியக்கூனிறவம் பாயக்களிறு
முருகுவிரிபொய்கையின்கண் மூழ்க - வெருவுற்ற
கோட்டகத்துப்பாய்வாளை கண்டலவன்கூசிப்போய்த்
தோட்டகத்தசெந்நெற் றுறையடையச் - சேட்டகத்த
காவிமுகமலரக் கார்நீலங்கண்படுப்ப
வாவிக்கணெய்த லலமர - மேவிய
வன்னந்துயிலிழப்ப வஞ்சிறைசேர்வண்டினங்க
டென்னுந்துணையிழப்பச் சூழ்கிடங்கின் - மன்னிய
வள்ளைநகைகாட்ட வண்குமுதம்வாய்காட்டத்
தெள்ளுபுனற்பங்கயங்க டேன்காட்ட - மெள்ள
நிலவுமலரணையி னின்றிழிந்தசங்க
மிலகுகதிர்நித்திலங்க ளீன - வுலவிய

மல்லைப்பழனத்து வார்பிரசமீதழிய
வொல்லைவரம்பிடறி யோடிப்போய்ப் - புல்லிய
பாசடையச்செந்நெற் படரொளியாற்பல்கதிரோன்
றேசடையவோங்கு செறுவுகளும் - மாசினீர்
நித்திலத்தின்சாயு நிகழ்மரகதத்தோலுந்
தொத்தொளிசெம்பொற் றெழிற்பரிய - மொய்த்த
பவளத்தின்செவ்வியும் பாங்கணையவோங்கித்
திவளக்கொடிமருங்கிற் சேர்த்தித் - துவளாமைப்
பட்டாடைகொண்டுடுத்துப் பைந்தோடிலங்குகுழை
யிட்டமைந்தகண்ணு ரிளங்கமுகும் - விட்டொளிசேர்
கண்களழல்சிதறிக் காய்சினத்தவாய்மதத்துத்
தண்டலையினீழற் றறியணைந்து - கொண்ட
கொலைபுரியாநீர்மையவாய்க் கொம்புவளைத்தேந்தி
மலையுமரவடிவங் கொண்டாங் - கிலைநெருங்கு
சூதத்திரளுந் தொகுகனிகளானிவந்த
மேதகுசீர்த்தெங்கின் வியன்பொழிலும் - போதுற்
றினமொருங்குசெவ்வியவா யின்றேன்றதும்பு
கனிநெருங்குதிண்கதலிக் காடு - நனிவிளங்கு
நாற்றத்தாலெண்டிசையும் வந்துநலஞ்சிறப்ப
வூற்றுமடுத்த வுயர்பலவு - மாற்றமரு
மஞ்சலெழில்வனமு மாதுளையின்வார்பொழிலு
மிஞ்சியிளங்காவி னீட்டமு - மெஞ்சாத
கூந்தற்கமுகுங் குளிர்பாடலத்தெழிலும்
வாய்ந்தசீர்ச்சண்பகத்தின் வண்காடு - மேந்தெழிலார்
மாதவியும்புன்னையு மன்னுமலர்க்குரவுங்
கேதகையுமெங்குஞ் செழீஇப் - போதி
னிளந்தென்றல்வந்தசைப்ப வெண்டிசையும்வாசம்
வளர்ந்துன்றுவார்பொழிலின் மாடே - கிளர்ந்தெங்கு
மாலையொலியு மரிவார்குரலொலியுஞ்
சோலைக்கிளிமிழற்றுஞ் சொல்லொலியு - மாலு
மறுபதங்களார்ப்பொலியு மான்றபொலிவெய்தி

யுறுதிரைநீர்வேலை யொலிப்ப - வெறிகமழு
நந்தாவனத்தியல்பு நற்றவத்தோர்சார்விடமு
மந்தமில்சீரா ரழகினன் - முந்திப்
புகழ்வாருந்தன்மையதாய்ப் பூதலத்துளோங்கி
நிகழ்திடர்க்குன்றுந்திடப்ப நேரே - திகழு
முளைநிரைத்துமூரிச் சிறைவகுத்துமொய்த்த
புளகத்தின்பாம்புரிசூழ் போகி - வளர
விரும்பதணுஞ்சேர விருத்தியெழினுஞ்சின்
மருங்கணையவட்டாலை யிட்டுப் - பொருந்தியசீர்த்
தோமரமுந்தொல்லைப் பொறிவீசியந்திரமுங்
காமரமுமெப்புழையுங் கைக்கலந்து - மீமருவும்
வெங்கதிரோன்றேர்விலங்கு மிக்குயர்ந்தமேருப்போன்
றங்கனகத்திஞ்சி யணிபெற்றுப் - பொங்கொளிசேர்
மாளிகையுமன்னியசீர் மண்டபமுமொண்டலத்த
சூளிகையுந்துற்றெழுந்த தெற்றிகளும் - வாளொளிய
நாடகசாலையு நன்பொற்கபோதகஞ்சேர்
பீடமைத்தமாடத்தின் பெற்றியுங் - கேடி
லுருவுபெறவகுத்த வம்பலமுமோங்கு
தெருவுவகுத்தசெய் குன்று - மருவினிய
சித்திரக்காவுஞ் செழும்பொழிலும்வாவிகளு
நித்திலஞ்சேர்நீடு நிலைக்களமு - மெத்திசையுந்
துன்னியெழில்சிறப்பச் சோதிமலர்மடுக்கை
மன்னிமகிழ்ந்துறையும் வாய்மைத்தாய்ப் - பொன்னு
மரகதமுநித்திலமு மாமணியும்பேணி
யிரவலர்கட்கெப்போது மீந்துங் - கரவாது
கற்பகமுங்காருமெனக் கற்றவர்க்குநற்றவர்க்குந்
தப்பாக்கொடைவளர்க்குஞ் சாயாத - செப்பத்தாற்
பொய்ம்மைகடிந்து புகழ்புரிந்துபூதலத்து
மெய்ம்மைதலைசிறந்து மேதக்கு - மூண்மை
மறைபயில்வார்மன்னு வியாகரணக்கேள்வித்
துறைபயில்வார்தொன்னூல் பயில்வார் - முறைமையிரு

லாகமங்கள்கேட்பா ரருங்கலைநூலாதரித்துப்
போகமொடுங்காப் பொருடெய்ப்பார் - சோகமின்றி
நீதிநிலையுணர்வார் நீணிலத்துளைம்புலனுங்
காதல்விடுதவங்கள் காமுறுவா - ராதி
யருங்கலைநூலோதுவா ராதரித்துவென்றிக்
கருங்கலியைநீங்கக் கனல்வகுப்பா - ரொருங்கிருந்து
காமநூல்கேட்பார் கலைஞானங்காதலிப்பா
ரோமநூலோதுவா ருத்தரிப்பார் - பூமன்னு
நான்முகனேயன்னசீர் நானூற்றுவர்மறையோர்
தாமன்னிவாழுந் தகைமைத்தாய் - நாமன்னு
மாரணங்குமற்றை யருந்ததியும்போன்மடவா
ரேரணங்குமாடத் தினிதிருந்து - சீரணங்கு
வீணைபயிற்றுவார் யாழ்பயில்வார்மேவியசீர்ப்
பாணம்பயில்வார் பயனுறுவார் - பேணியசீர்ப்
பூவைக்குப்பாட்டுரைப்பார் பொற்கிளிக்குச்சொற்பயில்வார்
பாவைக்குப்பொன்புனைந்து பண்புறுவா - ராயெங்கு
மங்கையர்கள்கூட்டமு மன்னுசிறார்குழுவும்
பொங்குலகமெல்லாம் பொலிவடையத் - தங்கிய
வேதவொலியும் விழாவொலியுமெல்லியலார்
கீதவொலியுங் கிளர்ந்தோங்கு - மாதரார்
பாவையொலியும் பறையொலியும்பல்சனங்கள்
மேவுமொலியும் வியனகரங் - காவலர்கள்
பம்பைத்துடியொலியும் பௌவப்படையொலியுங்
கம்பக்களிற்றொலியுங் கைகலந்து - நம்பிய
கார்முழக்குமற்றைக் கடன்முழக்கும்போற்கலந்த
சீர்முழக்கமெங்குஞ் செவிடுபடப் - பார்விளங்கு
செல்வநிறைந்தவூர் சீரிற்றிகழ்ந்தவூர்
மல்குமலர்மடந்தை மன்னுமூர் - சொல்லினிய
ஞாலத்துமிக்கவூர் நானூற்றுவர்சதுர்
வேலொத்தகண்ணார் விளங்குமூ - ராலித்து
மன்னிருகால்வேலை வளர்வெள்ளத்தும்பரொடும்
பன்னிருகானீரின் மிதந்தவூர் - மன்னும்

பிரமனூர்வேணுபுரம் பேரொலிநீர்ச்சண்பை
யரன்மன்னுதண்காழி யம்பொற் - சிரபுரம்
பூந்தராய்கொச்சைவயம் வெங்குருப்பொங்குபுனல்
வாய்ந்தநற்றோணி புரமறையோ - ரேய்ந்த
புகலிகழுமலம் பூம்புறவமென்றிப்
பகர்கின்றபன்பிற்ற தாகித் - திகழ்கின்ற
மல்லைச்செழுநகர மன்னவும்வல்லமண
ரொல்லைக்கழுவி லுலக்கவு - மெல்லையிலா
மாதவத்தோர்வாழவும் வையகத்தோருய்யவு
மேதக்கவானோர் வியப்பவு - மாதியாம்
வென்றிக்கலிகெடவும் வேதத்தொலிமிகவு
மொன்றிச்சிவனடியா ரோங்கவுந் - துன்றிய
பன்னுதமிழ்ப்பதிறு ருயிரநற்பனுவன்
மன்னுபுவியவர்க்கு வாய்ப்பவு - முன்னிய
சிந்தனையாற்சீரார் கவுணியர்க்கோர்சேயென்ன
வந்தங்கவதரித்த வள்ளலை - யந்தமில்சீர்
ஞானச்சுடர்விளக்கை நற்றவத்தோர்கற்பகத்தை
மானமறையவற்றின் வான்பொருளை - யானசீர்த்
தத்துவனைநித்தனைச் சைவத்தவரரசை
வித்தகத்தாலோங்கு விடலையை - முத்தமிழின்
செஞ்சொற்பொருள்பயந்த சிங்கத்தைத்தெவ்வருயி
ரஞ்சத்திகழ்ந்த வடலுருமை - யெஞ்சாமை
யாதிச்சிவனருளா லம்பொன்செய்வட்டிலிற்
கோதிலமிர்தநுகர் குஞ்சரத்தைத் - தீதறுசீர்க்
காலத்தொகுதியு நான்மறையின்காரணமு
மூலப்பொருளு முழுதுணர்ந்த - சீலத்
திருஞானசம்பந்த னென்றுலகஞ்சேர்ந்த
வொருநாமத்தாலுயர்ந்த கோவை - வருபெருநீர்ப்
பொன்னிவளநாடனைப் பூம்புகலிநாயகனை
மன்னர்தொழுதிறைஞ்சு மாமணியை - முன்னே
நிலவுமுருகற்கு நீலநக்கற்குந்
தொலைவில்புகழ்ச்சிறுத்தொண் டற்குங் - குலவிய

தோழமையாய்த்தொல்லைப் பிறப்பறுத்தசுந்தரனை
மாழையொண்கண்மாதர் மதனனைச் - சூழொளிய
கோதைவேற்றென்னன்றன் கூடற்குலநகரில்
வாதிலமணர் வலிதொலையக் - காதலாற்
புண்கெழுவுசெம்புனலா றூடப்பொருதவரை
வண்கழுவிற்றைத்த மறையோனை - யொண்கெழுவு
ஞாலத்தினாறிய மன்னுநனிபள்ளியது
பாலைதனைநெய்த லாக்கியுங் - காலத்து
நீரெதிர்ந்துசென்று நெருப்பிற்குளிர்படைத்தும்
பாரெதிர்ந்தபல்விடங்க டீர்த்துமுன் - னேரெழுந்த
யாழைமுரித்து மிருங்கதவந்தாளடைத்துஞ்
சூழ்புனலிலோடத் தொழில்புரிந்துந் - தாழ்பொழில்சூழ்
கொங்கிற்பனிநோய் பரிசனத்தைத்தீர்ப்பித்துந்
துங்கப்புரிசை தொகுமிழலை - யங்கதனி
னித்தன்செழுங்காசு கொண்டுநிகழ்நெல்வாயின்
முத்தின்சிவிகை முதல்கொண்டு - மத்தகுசீர்
மாயிருஞாலத்து மன்னுவடுதுறைபுக்
காயிரஞ்செம்பொ னதுகொண்டு - மாய்வரிய
மாண்புதிகழெம்பெருமான் மன்னுதிருவோத்தூரி
லாண்பனைகள்பெண்பனைக ளாக்கியும் - பாண்பரிசிற்
கைப்பாணியொத்திக்கா ழிக்கோலக்காவிற்பொற்
சப்பாணிகொண்டு தராதலத்து - ளெப்பொழுது
நீக்கரியவின்பத் திராகமிருக்குக்குற
ளேக்கரியபாசுரம்பல் பத்தோடு - மாக்கரிய
யாழ்முரிசக்கரமாற் றீரடிமுக்காலும்
பாழிமையாற்பாரகத்தோர் தாமுய்ய - ஆழி
யுரைப்பமரும்பல்புகழா லோங்கவுமைகோனைத்
திருப்பதிகம்பாடவல்ல சேயை - விருப்போடு
நண்ணுபுகழ்மறையோர் நாற்பத்தெண்ணாயிரவ
ரெண்ணின்முனிவர ரீட்டத்துப் - பண்ணமரு
மோலக்கத்துள்ளிருப்ப வொண்கோயில்வாயிலின்கட்
கோலக்கடைகுறுகிக் கும்பிட்டான் - காலும்

புகலிவளநகருட் பூசுரர்புக்காங்
கிகலில்புகழ்பரவி யேத்திப் - புகலிசேர்
வீதியெழுந்தருள வேண்டுமெனவிண்ணப்ப
மாதரத்தாற்செய்ய வவர்க்கருளி - நீதியாற்
கேதகையுஞ்சண்பகமு நேர்கிடத்திக்கீழ்த்தாழ்ந்த
மாதவியின்போதை மருங்கணைத்துக் - கோதி
லிருவேலிதன்னை யிடையிருத்தியீண்டு
மருவோடுமல்லிகையை வைத்தாங் - கருகே
கருமுகையைக்கைகலக்க வைத்துக்கழுநீர்ப்
பெருகுபிளவிடையே பெய்து - முருகியலும்
புன்னாகந்தன்னைப் புணரவிருவாச்சி
தன்னயலேமுல்லை தலையெடுப்ப - மன்னிய
வண்செருந்திவாய்நெகிழ்ப்ப மௌவலலர்படைப்பத்
தண்குருந்தமாடே தலையிறக்க - வொண்கமலத்
தாதடுத்தகண்ணியாற் றண்ணறுங்குஞ்சிமேற்
போதடுத்தகோலம் புனைவித்துக் - காதிற்
கனவயிரகுண்டலங்கள் சேர்த்திக்கழுத்தி
னினமணியின்னார மிலகப் - புனைகனகத்
தொத்தடுத்தபூஞ்சுரிகைச் சோதிசேர்தாளிம்பம்
வைத்துமணிக்கண் டிகைபூண்டு - முத்தடுத்த
கேயூரந்தோண்மேற் கிடத்திக்கிளர்பொன்னின்
வாய்மைபெறுநூல் வலந்திகழ - வேயுந்
தமனியத்தின்ஞாண்வடமுந் தண்டரளக்கோப்புஞ்
சிமையவரைமார்பிற் சேர்த்தி - யமைவுற்ற
வெண்ணீற்றினொண்களப மட்டித்துமேவுதொழி
லொண்ணூற்கலிங்க முடல்புனைந்து - திண்ணேக்கிற்
காற்றுருமோகுன்றோ கடலோவடலுருமோ
கூற்றுருவோவென்னக் கொதித்தெழுந்து - சீற்றத்
தழல்விழித்துநின்றெதிர்ந்து தாலவட்டம்வீசிப்
புழைதடக்கைகொண்டெறிந்து பொங்கி - மழைமதத்தாற்
பூத்தகடதடத்துப் போகமிகப்பொலிந்த
ராத்திரத்ததாகிக் கலித்தெங்கும் - கோத்த

கொடுநிகளம்போக்கிநிமிர் கொண்டெழுந்துகோபித்
திடுவண்டையிட்டுக் கலித்து - முடுகி
நெடுநிலத்தைத்தானுழக்கி நின்றுநிகர்நீத்
திடிபெயரத்தாளந் திலுப்பி - யடுசினத்தாற்
கன்றமுகம்பருகிக் கையெடுத்தாராய்ந்து
வென்றிமருப்புருவ வெய்துயிர்த் - தொன்றிய
கூடமரணழித்துக் கோபுரங்களைக்குத்தி
நீடுபொழிலை நிகரழித் - தோடிப்
பணப்பாகரைப்பரிந்து குத்திப்பறித்த
நிணப்பாகைநீள்விசும்பின் வீசி - யணைப்பரிய
வோடைக்கருங்களிற்றை யொண்பரிக்காரர்கடா
மாடணையக்கொண்டு வருதலுமே - கூடி
நயந்துகுரற்கொடுத்து நட்பளித்துச்சென்று
வியந்தணுகிவேட்டந் தணித்தாங் - குயர்ந்த
வுடற்றூயவாசிதனைப் பற்றிமேல்கொண்டாங்
கடற்கூடற்சந்தி யணுகி - யடுத்த
பயில்பலவும்பேசிப் படுபுரசைநீக்கி
யயர்வுகெடவணைத்துத் தட்டி - யுயர்தரு
தண்டுபேரோசையின்கட் டாள்கோத்துச்சீர்ச்சிறுத்
தொண்டர்பிறகணையத் தோன்றுதலு - மெண்டிசையும்
பல்சனமுமாவும் படையும்புடைகிளர
வொல்லொலியாலோங்கு கடல்கிளர - மல்லற்
பரித்தூரங்கொட்டப் படுபணிலமார்ப்பக்
கருத்தோடிசைகவிஞர் பாட - விரித்த
குடைபலவுஞ்சாமரையுந் தொங்கல்களுங்கூடிப்
புடைபரந்துபொக்கம் புடைப்பக் - கடைபடு
வீதியணுகுதலும் வெள்வளையாருண்மகிழ்ந்து
காதல்பெருகிக் கலந்தெங்குஞ் - சோதிசே
ராடரங்கின்மேலு மணிமாளிகைகளிலுஞ்
சேடரங்குநீண்மறுகுந் தெற்றியிலும் - பீடுடைய
பேரிளம்பெண்ணீறாகப் பேதைமுதலாக
வாரிளங்கொங்கை மடநல்லார் - சீர்விளங்கப்

பேணுஞ்சிலம்பும் பிறங்கொளிசேராரமும்
பூணும்புலம்பப் புறப்பட்டுச் - சேண்மறுகிற்
காண்டகையவென்றிக் கருவரைமேல்வெண்மதிபோ
லீண்டுகுடையி னெழினிழற்கீழ்க் - காண்டலுமே
கைதொழுவார்நின்று கலைசரிவார்மால்கொண்டு
மெய்தளர்வார்வெள்வளைகள் போய்வீழ்வார்-வெய்துயிர்த்துப்
பூம்பயலைகொள்வார் புணர்முலைகள்பொன்பயப்பார்
காம்பனையமென்றோட் கவின்கழிவார் - தாம்பயந்து
வென்றிவேற்சேயென்ன வேனில்வேட்கோவென்ன
வன்றென்னவாமென்ன வையுற்றுச் - சென்றணுகிக்
காழிக்குலமதலை யென்றுதங்கைசோர்ந்து
வாழிவளைசரிய நின்றயர்வார் - பாழிமையா
லுள்ளநிலைதளர்ந்த வொண்ணுதலார்வெல்களிற்றை
மெள்ளநடவென்று வேண்டுவார் - கள்ளலங்க
லாராமையன்றியுந் தையனல்லார்முகத்தைப்
பாராமைசாலப் பயனென்பார் - நேராக
வென்னையேநோக்கினா னேந்திழையீரிப்பொழுது
நன்மைநமக்குண் டெனநயப்பார் - கைம்மையா
லொண்கலையுநாணு முடைதுகிலுந்தோற்றவர்கள்
வண்கமலத்தார்வலிந்து கோடுமெனப் - பண்பின்
வடிக்கண்மலர்வாளி வார்புருவம்வின்மேற்
றொடுத்ததரந்தொண்டை துடிப்பப் - பொடித்தமுலைக்
காசைக்கருங்குழலார் காதற்கவுணியன்பாற்
பூசற்கமைந்து புறப்படுவார் - வாசச்
செழுமலர்த்தாரின்றெனக்கு நல்காதேசீரார்
கழுமலத்தார்கோவே கழல்க - டொழுவார்க
ளங்கோல்வளையிழக்கப் போவதுநின்னுடைய
செங்கோன்மையோவென்று செப்புவார் - நங்கைமீ
ரின்றிவனல்குமே யெண்பெருங்குன்றத்தி
லன்றமணர்கூட்டத்தை யாசழித்துப் - பொன்ற
வுரைகெழுவுசெந்தமிழ்ப்பா வொன்றினால்வென்றி
நிரைகழுமேலுய்த்தானை நேர்ந்து - விரைமலர்த்தார்

பெற்றிடலாமென்றிருந்த நம்மிலும்பேதையர்கண்
மற்றுளரோவென்று வகுத்துரைப்பார் - மற்றிவனே
பெண்ணிரக்கமன்றே பிறைநுதலீர்மாகுணத்தி
னண்ணுகடுவிடத்தா னூட்சென்று - விண்ணுற்ற
வாருயிரைமீட்டன் றவளையணிமருக
லூரறியவைத்த தெனவுரைப்பார் - பேரிடரா
லேசுவார்தாமுற்ற வேசறவைத்தோழியர்முன்
பேசுவார்நின்றுதம் பீடழிவா - ராசையா
லேவார்நலனழிவார் நாணொடுபூணிழப்பார்
மெய்வாடுவார்வெருள்வார் வெய்துயிர்ப்பார் - தையலார்
பூந்துகிலைப்பூமாலை யென்றணிவார்பூவினைமுன்
சாந்தமெனமெய்யிற் றைவருவார் - வாய்ந்த
கிளியென்றுபாவைக்குச் சொற்பயில்வார்பந்தை
யொளிமேகலையென் றுடுப்பா - ரளிமேவு
பூங்குழலார்மையலாய்க் கைதொழமுன்போதந்தா
னோங்கொலிசேர்வீதி யுலா.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.

---

## ஒருபோகு கொச்சகக்கலிப்பா.

அலையார்ந்தகடலுலகத் தருந்திசைதோறங்கங்கே
நிலையார்ந்தபலபதிக நெறிமனிதர்க்கினிதியற்றி
யீங்கருளியெம்போல்வார்க் கிடர்கெடுத்தல்காரணமா
வோங்குபுகழ்ச்சண்பையெனு மொண்பதியுளுதித்தனையே.

செஞ்சடைவெண்மதியணிந்த சிவனெந்தைதிருவருளால்
வஞ்சியனநுண்ணிடையாண் மலையரையன்மடப்பாவை
நற்கண்ணியளவிறந்த ஞானத்தையமிர்தாக்கிப்
பொற்கிண்ணத்தருள்புரிந்த போனகமுன்னுகர்ந்தனையே

தோடணிகாதினனென்றுந் தொல்லமரர்க்கெஞ்ஞான்றுந்
தேடரியபராபரனைச் செழுமறையினகன்பொருளை
யந்திச்செம்மேனியனை யடையாளம்பலசொல்லி
யுந்தைக்குக்காணவர னுவனுமென்றுரைத்தனையே

[இவைமூன்றும் நான்கடித்தாழிசை.]

வளமலிதமிழிசை வடகலைமறைவல
முளரிநன்மலரணி தருதிருமுடியினை

கடல்படுவிடமடை கறைமணிமிடறுடை
யடல்கரியுரியனை யறிவுடையளவினை

[இவையிரண்டும் அராகம்.]

கரும்பினுமிக்கினியபுகழ்க் கண்ணுதல்விண்ணவனடிமேற்
பரம்பவிரும்புவியவர்க்குப் பத்திமையைவிளைத்தனையே

பன்மறையோர்செய்தொழிலும் பரமசிவாகமவிதியு
நன்மறையின்விதிமுழுது மொழிவின்றிநவின்றனையே

[இவையிரண்டும் இரண்டடித்தாழிசை.]

அணிதவத்தவர்களுக் கதிகவித்தகனுநீ
தணிமனத்தருளுடைத் தவநெறிக்கமர்நநீ
யமணரைக்கழுநுதிக் கணைவுறுத்தவனுநீ
தமிழ்நலத்தொகையினிற் றருசுவைப்பனுவனீ

[இவைநான்கும் நாற்சீரோரடியம்போதரங்கம்.]

மறையவர்க்கொருவனீ
மருவலர்க்குருமுநீ
நிறைகுணத்தொருவனீ
நிகரிலுத்தமனுநீ

[இவைநான்கும் முச்சீரோரடியம்போதரங்கம்.]

அரியைநீ
யெளியைநீ
யறவனீ
துறவனீ
பெரியைநீ
யுரியைநீ
பிள்ளைநீ
வள்ளனீ

[இவையெட்டும் இருசீரோரடியம்போதரங்கம்.]

எனவாங்கு [இது தனிச்சொல்.]

அருந்தமிழ்விரகநிற் பரசுதுந்திருந்திய
நிரைச்செழுமாளிகை நிலைதொறுநிலைதொறு
முரைச்சதுர்மறையி னோங்கியவொலிசேர்
சீர்கெழுதுழனித் திருமுகம்பொலிவுடைத்

தார்கெழுதண்டலைத் தண்பணைதழீஇக்
கற்றொருகுபுரிசைக் காழியர்நாத
நற்றொருசீர்த்தி ஞானசம்பந்த
நின்பெருங்கருணையை நீதியி
னன்புடையடியவர்க் கருளுவோயெனவே.[இது சுரிதகம்.](க)

வெண்பா.

எனவேயிடரகலு மின்பமேயெய்து
நனவேயரனருளை நாடும் - புனலேய
செங்கமலத்தண்டார்த் திருஞானசம்பந்தன்
கொங்கமலத்தண்காழிக் கோ. (உ)

கட்டளைக்கலித்துறை.

கோலப்புலமணிசுந்தரமாளிகைக்குந்தளவா
ரேலப்பொழிலணிசண்பையர்கோனையிருங்கடல்சூழ்
ஞாலத்தணிபுகழ்ஞானசம்பந்தனைநற்றமிழே
போலப்பலபுன்கவிகொண்டுசேவடிபோற்றுவனே. (௩)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

போற்றுவாரிடர்பாற்றியபுனிதன்
பொழில்சுலாவியபுகலியர்பெருமா
னேற்றவார்புகழ்ஞானசம்பந்த
னெம்பிரானிருஞ்சுருதியங்கிரிவாய்ச்
சேற்றுவார்புனங்காவல்புரிந்தென்
சிந்தைகொள்வதுஞ் செய்தொழிலானுன்
மாற்றநீரெமக் கின்றுரைசெய்தால்
வாசியோகுறமாதுநலீரே. (௪)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நலமலிதரும்புவனிநிறைசெய்புகழின்பானி
பனிமதியணைந்தபொழில்சூழ்
பொலமதிலிரும்புகலியதிபதிவிதம்பெருகு
புனிதகுணனெந்தமிறைவன்

பலமலிதருந்தமிழின்வடகலைவிடங்கன்மிகு
பரசமயவென்றியரிதன்
சலமலிதருங்கமலசரணிணைவனென்றனது
தகுவினைகள்பொன்றும்வகையே. (௫)

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வகைதருமுத்தமிழாகரன்மறைபயிறிப்பியவாசகன்
வலகலைவித்தகன்வானவின்மதியணைபொற்குவைமாளிகை
திசைதிசைமட்டலர்வார்பொழில்திகழ்புகலிக்கரசாகிய
திருவளர்விப்பிரசிகாமணிசெழுமலயத்தமிழ்கேசரி
மிகமதவெற்றிகொள்வாரணமிடையவருடைக்குலம்யாளிகள்
விரவிருளிற்றனிநீணெறிவினைதுயர்மொய்த்துளவேமணி
நகையெழிலிற்குறமாதுனைதருமைநினைக்கிலணியிவ
ணசையின்முழுப்பழியாதன்முனணுகலினிக்கிரிவாணனே.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வாணிலவும்புனலும்பயில்செஞ்சடைவண்கருணைகரனை
மலைமாதுமையொடுமிவணுவானெனமுன்னுரைசெய்தவன்
சேணிலவும்புகழ்மாளிகைநீடியதென்புகலிக்கரசைத்
திருவாளனையெழிலருகாசனிதனைமருவாதவர்கிளைபோ
ஞணிலவும்பழியோகருதாதயலானொருகாளையுட
னசைதீர்நிலைகொலைபுரிவேடுவர்பயிறருகானதர்வெயிலிற்
றேணிலவுங்கிளிபாவையொடாயமும்யாயெனையுமொழியக்
கிறியாலெனதொருமகள்போயுறுதுயர்கெடுவேனறிகிலனே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அறிவாகியின்பஞ்செய்தமிழ்வாதில்வென்றந்
வமணனவன்குண்டர்கழுவேறமுன்கண்ட
செறிமாடவண்சண்பைநகராளியென்றந்தை
திருஞானசம்பந்தனணிநீடுதிண்குன்றி
னெறியாலமண்டுன்றிமுனைநாள்சினங்கொண்டு
நிறைவார்புனற்கின்றமகண்மேல்வருந்துங்க
வெறியார்மதத்தங்குகதவாரணங்கொன்ற
வெகுளாதநஞ்சிந்தைவிறலாளன்பண்டே. (௮)

## பதின்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பண்டமுதுசெய்தவுமைநங்கையருண்மேவுசிவஞானம்
பைந்தரளநன்சிவிகைசெம்பொனணிநீடுகிறதாளங்
கொண்டதரனும்பர்பரனெங்கள்பெருமானருள்படைத்துக்
கொடுத்ததமிழைத்தவகுலத்தவர்களுக்குலகிலின்பங்
கண்டதருகந்தர்குலமொன்றிமுழுதுங்கழுவிலேறக்
கறுத்ததுவினைப்பயன்மனத்திலிறைகாதலதுவன்றி
விண்டதுவும்வஞ்சகரைமஞ்சணவுகின்றமணிமாட
வேணுபுரநாதன்மிகுவேதியர்சிகாமணிபிரானே. (௯)

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பிரானைமெய்த்திருஞானசம்பந்தனை மறையவர்பெருமானைக், குராமலர்ப்பொழிற்கொச்சையர் நாதனைக்குரைகழலினைவாழ்த்தித், தராதலத்தினிலவனருணினைவொடு தளர்வுறுதமியேனுக், கிராவினைக்கொடுவந்ததிவ்வந்திமற்றினிவிடிவறியேனே. (௧0)

## பதினொன்குசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஏனமுகத்தவபுத்தரையிந்திரசித்துமணம்புணர்வுற்று [ர்
னீழவனூர்சொரிதொட்டியினங்களைவெட்டியிசித்தனர்பட்ட
தானமிரக்கிறசீதைமடுப்பதுசாதிகுடத்தொடுகண்டீர்
சக்கிரவர்த்திகள்சிக்கரமட்டுவர்தத்துவமிப்பரிசுண்டே
டானபுகழ்ப்பயில்விப்ரசிகாமணியத்தகுமைப்புரையுங்கா [ஞே
ரார்பொழினீடியசண்பையர்காவலன்வண்களியேனெளியே
சோனகனுக்குமெனக்குமெனத்தரையம்மனைசூலதுகொண்டா
டும்புருவாலியைவென்றுநிலத்திடைநின்றுநுலுக்குகிருரே.

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆர்மலிபுகலிநாதனருளெனவிரவில்வந்தென்
வார்முலைபயலைதீரமணந்தவர்தணந்துபோன
தோதராழியனும்மைச்செய்பிழையெம்மதில்லை
கார்திரைபுரளமோதிக்கரைபொருங்கடலினீரே. (௧௨)

## இதுவுமது. வேறு.

எழுஞலவெற்பிவைமிடறிலடக்குவ
னெறிகடலிற்புனல்குளறிவயிற்றினின்
முழுதுமொளித்திரவிலையபிகிலத்திடை
முடிகுவணிப்பொழுதினைவயலவிச்சைசகள்
கழுமலநற்பதியதிபதமிழ்க்கடல்
கவுணியர்[illegible]கலகனினைக்கு
ஞெழுதுவழுத்தியபிறரொருவர்க்குறு
துயர்வருவிப்பனிதரியதொர்விச்சையே. (கஎ)

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சயமிகுந்தருகரைமுருக்கியுதமிழ்ப்பயிற்றியநாவன்
வியவியற்றிருமருகலிற்கொடுவிடமழித்ததருள்போதன்
கடறுடைப்புனல்வயல்வளத்தகுகழுமலப்பதிநாத
னியலுடைக்கழலெழுநினைப்பவரிருவினைத்துயர்போமே. (கஅ)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மேதகுந்திகழ்பூகநாகசண்பககுத
வேரிவண்டறைசோலையாலைதுன்றியகாழி
நாதனந்தணர்கோனெனுனைவண்புகழாளி
ஞானசுந்தரன்மேவுதார்நினைந்தயர்வேனை
நீதியன்றனபேசும்யாயுமிந்துவும்வாச
நீடுதென்[illegible]சேர
மோதுதெண்டிரைசேவல்சேருமன்றிலும்வேயு
மூடுதண்பனிவாடைகூடிவன்பகையாமே. (க௯)

## இதுவுமது. வேறு.

வன்பகையாமக்குண்டரைவென்றோய்.
மாமலர்வாளிப்பொருமதவேளைத்
தன்பகையாகச்சிந்தையுணையுந்
தையலையுய்யக்கொண்டருள்செய்யாய்
நின்புகழ்பாடிக்கண்பனிசோரா
நின்றெழினாருறுவென்றகநெக்கிட்

டன்பகலாமெய்ச்சிந்தையரின்பா
வம்பொழின்மாடச்சண்பையர்கோவே. (உ0)

இதுவுமது. வேறு.

கோவின்றிருமுகமீதொடுவருதூதுவனீர
குளிர்பைம்பொழில்வளநாடெழினிதியம்பரிசம்மீ
மாவீரியரிவர்தங்கையென்மருடன்றிறமமண
மறவெங்குலமறிகின்றிலன்பழியச்சதவாசன்
பாவேறியமதுரத்தமிழ்விரகன்புகலியர்மன்
பயில்வண்புகழருகாசனிபணியன்றெனினமர்கா
டேவரியைமடமின்றுடியடிமின்படையெழுமின்
றெருசேனையுமவனும்படமலையும்பரிசினியே. (உக)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இனியின்றொழிமினிவ்வெறியும்மறியடு
தொழிலும்மிடுகுரவையுமெல்லா
நனிசிந்தையினிவண்மிகவன்புறுவதொர்
நகையுண்டூநரைமுதுபெண்டீர்
புனிதன்புகலியரதிபன்புனைதமிழ்
விரகன்புயமுறுமரவிந்தம்
பனிமென்குழலியையணிமின்றுயரொடு
மயலுங்கெடுவதுசரதம்மே. (உஉ)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சரதமணமலியரிசம்வருவன
தளர்வில்புகலியரதிபனதிதரு
வரதனணிதமிழ்விரகன்மிருபுகழ்
மருவுசுருதிகன்மலையினமர்தரு
விரதமுடையநிலிடையினவண்மனம்
விரைசெய்குழல்யையணைவதரிதெனா
விரதமழிதரவருதன்முனமினி
யெளியதொருவகைகருதுமலையனே. (உ௩)

### இதுவுமது. வேறு.

அயனெடியமாலுமவரறிவரியதாணுவர
னருளினொடுநீடவனியிடர்முழுதுபோயகல
வயலணிதென்வீழிமிழலையினிலவுகாசின்மலி
மழைபொழியுமானகுண மதுரன்மதிதோய்கனக
செயநிலவுமாடமதில் புடைதழுவுவாசமலி
செறிபொழில்சுலாவிவளர்சிரபுரசுரேசன்முதிர்
பயனிலவுஞானதமிழ் விரகன்மறைஞானமுணர்
பரமகுருநாதன்மிகுபரசமயகோளரியே. (௨௪)

### இதுவுமது. வேறு.

அரியாருங்கிரிநெறியெங்ஙனநீர்வந்தீ
ரழகிதினிப்பயமில்லையந்திக்கப்பாற்
றெரியாபுன்சிறுநெறிகளெந்தம்வாழ்விச்
சிறுகுடியின்றிரவிங்கேசிரமந்தீர்ந்திச்
சுரியார்மென்குழலியொடும்விடியச்சென்று
தொகுபுகழ்சேர்திருஞானசம்பந்தன்றன்
வரியாரும்பொழிலுமெழின் மதிலுந்தோற்றும்
வயற்புகலிப்பதியினிதுமருவலாமே. (௨௫)

### ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

ஆமாண்பொன்கூட்டகத்தவஞ்சொலிளம்பைங்கிளியே
பாமாலையாழ்மூரியப்பாணழியப்பண்டருள்செய்
மாமானசுந்தரன்வண்சம்பந்தமாமுனியெங்
கோமான்றன்புகழொருகாலின்புறநீகூறாயே
கொச்சையர்கோன்றன்புகழ்யானின்புறநீகூறாயே. (௨௬)

### எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கூறதாகமெய்யடிமைதானெனையுடையகொச்சையரதிபதி
வீறதார்தமிழ்விரகன்மேதகுபுகழினனிவன்மிகுவனச்
சேறதார்தருதிரள்களைக்கனசெழுமுலைக்குரியவர்சினத்
தேறதானிதுதழுவினரெனவிடிகொண்மாமுரசதிருமே. (௨௭)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சதுரன்புகலியரதிபன்கூர்
நவசுந்தரகவுணியர்தஞ்சீர்
முதல்வன்புகலியரதிபன்றண்
முறைவந்தடையலர்நகரம்போ
லெதிர்வந்தனர்விறல்கெடவெம்போ
ரெரிவெங்கணைசொரிபுரிமின்கா
ரதிர்கின்றனவிதுபருவஞ்சே
ரலர்தம்பதிமதிவிடுபின்னே. (௨௮)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பின்னுமாகத்தெழிலியுஞ்சேர்
மிருமென்மாடப்புகலிநாதன்
துன்னுஞானத்தெம்பிரான்மெய்த்
தொகைசெய்பாடற்பதிகமன்றேல்
பொன்னுமாநற்றரளமுந்தண்
பொருகயற்கண்டனைநிறைத்தா
னின்றுமேகிப்பொருள்படைப்பா
னெங்ஙனேநானென்றுமாறே. (௨௯)

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாறிலாதபொடிநீறுறுகோலவடிவும்
வம்புபம்புகுழலுந்துங்ககொங்கையிணையு
மூறியேறுபதிகத்தொகைசெய்செந்நாவு
மொத்துமித்துணையுஞ்சிறந்தபத்திமிகையும்
வீறதேறும்வயல்சூழ்காழிஞானபெருமான்
வென்றியன்றுகழலிலொன்றிநின்றபணியுந்
தேறல்போலுமொழியுஞ்சேல்கள்போலும்விழியுஞ்
சிந்தைகொண்டபரிசன்றிமங்கைதவமே. (௩௰)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கைதவத்தாலெனனிடைக்கு
நீவந்ததறியேனேகலதிப்பாணா

மெய்தவத்தாருயிரனைய
பிருசைவசிகாமணியைவேணுக்கோனைச்
செய்தவத்தால்விதிவாய்த்த
செழுமலையாரவனுடையசெம்பொற்றிண்டோ
ளெய்தவத்தால்விளிவெனக்கென்
யாதுக்குநீபலபொய்யிசைக்கின்றாயே. (௩௧)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இசையைமுகந்தெழுமிடறுமிதிங்கிவ
ணிடுகரணங்களினியல்பும்வளம்பொலி
திசைதிசைதூன்றியபொழில்சுலவுந்திகழ்
சிரபுரமன்றகுதமிழ்விரகன்பல
நசைமிகுவண்புகழ்பயிலுமதங்கித
னளிர்முலைசெங்கயல்விழிநகைகண்டபின்
வசைதருமென்குலமவைமுழுதுங்கொள
மதிவளர்சிந்தையாமயல்வருகின்றதே. (௩௨)

இதுவுமது. வேறு.

வருகின்றனனென்றனதுள்ளமுமின்
வசமேநிறுவிக்குறைகொண்டுதணித்
தருகும்புனல்வெஞ்சுரம்யானமரும்
மதுநீயிறையுன்னினையாதெனின்முன்
கருகும்புயல்சேர்மதில்வண்புகலிக்
கவிஞன்பயில்செந்தமிழாகரன்மெய்ப்
பெருகுந்திருவாரருள்பேணலர்போற்
பிழைசெய்தனைவந்ததர்பெண்கொடியே. (௩௩)

இதுவுமது. வேறு.

கொடிநீடுவிடையுடையபெருமானையடிபரவு
குணமேதைகவுணியர்கள்குலதீபசுபசரித
னடியேனதிடர்முழுதுமறவீசுதமிழ்விரக
னணியானபுகலிநகரனையானகனைகடலின்
முடிநீடுபெருவலைகொடலைமூடுபுகுவனுமர்
முறையேவுபணிபுரிவனணிதோணிபுனைவனவை

படியாருங்கரியவரியாருமதர்நயனி
பணைவார்மென்முலைநுளையர்மடமாதனருள்பெறினே.

இதுவுமது. வேறு.

பெறுபயன்மிகப்புவியுளருளுவணபிற்றைமுறை
பெருநெறியளிப்பனபல்பிறவியையொழிச்சுவன
வுறுதுயரழிப்பனமுறுமைதிருவருட்பெருக
வுடையனநதிப்புன்வினைதிர்பஃறியுய்த்தனபு
னறுமுறுகுரைச்சமணர்நிரைகழுநிறுத்தியன
நனிகதவடைத்தனதனருவிடமகற்றியன
தறுபொழின்மதிற்புறவமுதபதிமனுப்பரிய
தொழில்பலமிகுத்ததமிழ்விரகனகவித்தொகையே. ()

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தொகுவார்பொழில்சுற்றியவான்மதிதோயுமதிற்கணமார்
தொலையாததிருப்பொழின்மாளிகைமாடநெருங்கியசீர்
மிகுகாழிமன்முத்தமிழாகரன்மேதகுபொற்புனைதார்
விரையார்கமலக்கழலேதுணையாகநினைப்பவர்தா
மகராதரநித்திலநீர்நிலையார்புவியுத்தமராய்
வரலாறுபிழைப்பினுழியிலக்கிதமா
தகுவாழ்வுநிலைத்தெழில்சேரறமானபயிற்றுவர்மா
சதுரால்வினைசெற்றதன்மேலணுகார்பிறவிக்கடலே. (௧௫)

நேரிசையாசிரியப்பா.

கருமங்கேண்மதி கருமங்கேண்மதி
தருமதிப்பாண கருமங்கேண்மதி
நிரம்பியபாட னின்கண்ணேறு
மரும்பசிநலிய வலக்கணுற்றினைத்தக்
காந்தியவுதரக் கனறழைத்தெழுதலிற்
றேய்ந்தடல்வற்றிச் சின்னரம்பெழுந்தே
யிறுகுபுசுள்ளி யியற்றியகுரம்பை
யுறுசெறுத்தனைய வுருவுகொண்டுள்வளொடு
பின்னிசைநல்லி யாழ்சுமந்தன்ன
மன்னியவளநகர் மனைக்கடைதோறுந்

சென்றுழிச்சென்றுழிச் சில்பலிபெறுது
நின்றுழிநிலாவு வன்றுயர்போயொழிந்
தின்புற்றிருநிதி யெய்துமதநுன
துள்ளத்துள்ள தாயின்மதுமலர்
வண்டறைசோலை வளவயலகவ
வொண்டிறற்கோண்மீ னுலாவுருண்டக
நூயர்தருவரையி னியறருபதணத்துக்
கம்நுதிக்கழுக்கடை மிடைதருவேலிக்
கனகப்பருமுரட் கனையக்கபாட
விலையக்கோபுர விளங்கெழில்வாயி
னெகிழ்ச்சியில்வருத்துத் திகழ்ச்சியிலோங்கு
மஞ்சணையிஞ்சி வண்கொடிமிடைந்த
செஞ்சுடர்க்கனகத் திகழ்சிலம்பனைய
மாளிகையொளிச் சூளிகைவளாகத்
தணிவுடைப்பலபட மணிதுடைத்தழுத்திய
நல்லொளிபரந்து நயந்திகழிந்திர
வில்லொளிபலபல விசும்பிடைக்காட்ட
மன்னியசெல்வத்துத் துன்னியபெருமைச்
செம்மலர்மாது சேர்ந்துறைபிரியாக்
கழுமலநாதன் கவுணியர்குலபதி
தண்டமிழ்விரகன் சைவசிகாமணி
பண்டிதரின்பன் பரசமயகோளரி
யென்புனைதமிழ்கொண் டிரங்கியென்னுள்ளத்
தன்பினையருளிய வாண்டகைதன்புகழ்
முறைவறுத்துள்கி நிறைகடைகுறுகி
நாட்பொலிநல்லிசை பாட
மாப்பெருஞ்செல்வ மன்னுதிநீயே. (௩எ)

வஞ்சித்துறை.

நீதியினிறைபுகழ்
மேதகுபுகலிமன்
மாதமிழ்விரகனை
யோதுவதுறுதியே. (௩அ)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உ[illegible]முகிழ்[illegible]நீதி
புனலுமனமாரமுழுவதுமதாக
வழுதிபெருமாதர்பெயரருச்செறுழ
மழுகிதினியானுனருள்புனைவதாவ
பெறுதியிவைநீயெனடிபணிதன்மேவு
பெருமைகெடநீடுபடிமெருழிபொன்மாட
நறைகமழுவாசவளர்பொழில்சுலாவு
நனிபுகலிநாதநதமிழ்விரகநீயே. (௩௯)

## ஆசிரியத்துறை.

நீமதித்துன்னிநினையேன்மடநெஞ்சமே
காமதிக்கார்பொழிற்காழி
நாமதிக்கும்புகழ்ஞானசம்பந்தனொண்
பூமதிக்குங்கழல்போற்றே. (௪0)

## கட்டளைக்கலிப்பா.

போற்றிசெய்தான்பொற்கழல்பூண்டதே
புந்தியா[illegible]டதே
மாற்றிவிட்டதுவல்விடவாதையே
மன்னுகுண்டரைவென்றதுவாதையே
யாற்றெதிர்ப்புனலுற்றதுந்தோணியே
யானதன்பதியாவதுந்தோணியே
நாற்றிசைக்கவிஞானசம்பந்தனே
நல்லநாமமுஞானசம்பந்தனே. (௪௧)

## கைக்கிளைமருட்பா.

அம்புந்துசண்ணிமைக்குமானனுதல்வியர்க்கும்
வம்புந்துகோதைமலர்வாடுஞ் - சம்பந்தன்
காமருகழுமலமனையா
ளாமிவளணங்கலளடிநிலத்தனவே. (௪௨)

### பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தனமுந்தூகிலுஞ்சாலிக்குவையுங்கோலக்கனமாடச்
சண்பைத்திகழ்மாமறையோன்றவமெய்க்குலதீபன்
கன்வண்கொடைநீடருகாசலிதன்கமலத்தூல்பாடிக்
கண்டார்நிறையக்கொள்ளப்பசியைக்கருதாதெம்பாண
புனைதண்டமிழின்னிசையார்புகலிக்கரசைப்புகழ்பாடிப்
புலையச்சேரிக்காளைபுகுந்தாலென்சொற்புதிதாக்கிச்
சிலைவொங்கமாக்களிறொன்றிந்தச்சேரிக்கொடுவந்தார்
சேரிக்குடிலுமிழந்தாரிதனைச்செய்வதறியாரே. (௪௩)

### இன்னிசைவெண்பா.

யாரேயெம்போலவருளுடையாரின்கமலைத்
தாரேயுஞ்சென்னித்தமிழ்விரகன் - சீரேயுங்
கொச்சைவயன்றன்குரைகழற்கேமெச்சி
யடிமைசெயப்பெற்றே னறிந்து. (௪௪)

### பதின்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அறிதருநுண்பொருள்சேர்பதிகம்மரன்கழன்மே
லணிதருசுந்தரமலிதமிழ்விரகன்பிறைதோய்
செறிதருபைம்பொழின்மாளிகைகலவுந்திகழ்சீர்த்
திருவளர்சண்பையின்மாடலைகடலொண்கழிசே
ரெறிதிரைவந்தெழுமீனிரைநுகர்கின்றிலைபோ
யினமுமடைந்திலைகூரிடரோடிருந்தனையா
லுறுதுயர்சிந்தையினூடுதவினரெந்தமர்போ
லுமருமகன்றனரோவிதுவுரைவண்குருகே. (௪௫)

### கலிவிருத்தம்.

ஒருகலிமலிமுன்கைக்கொடியுநல்விறலவனு
மருகணைகுவரப்பாலரிதிவியபுரிசீண்டின்
றருகெழுமுகில்வண்கைத்தருதமிழ்விரகன்றன்
கருகெழுபொழின்மாடக்கழுமலவளநாடே. (௪௬)

## இதுவுமது வேறு.

நாடேறும்புகழ்ஞானசம்பந்தன்வண்
சேடேறுங்கொச்சைசேர்வளஞ்செய்தனை
மாடேறுந்தையல்வாடமலர்த்தனை
கோடேறுங்கொடியாய்கொல்லைமுல்லையே. (௬௭)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முல்லைநகையுமைதன்மன்னுதிருவருளை
முற்றியுறுபெரியசெற்றமுனிவன்றிரு
நல்லபொழிற்சுலவுதொல்லையணிபுகலி
நாதன்மன்றமுதல்வன்வேதமலையதனில்
எல்லையிலர்கணையுமில்லைபகழியுமு
வேழமிரலைகலைகேழல்வினவுறுவர்
சொல்லையிலர்விரகரல்லர்தமைகொணர்வர்
சோழியிலொருவராவழிதர்வரோ. (௬௮)

## வஞ்சித்துறை.

வழிதருபிறவியினுறு
தொழிலமர்துயர்கெடுமிகு
பொழிலணிதருபுகலிம
னெழிலிணையடியிறைமினே. (௬௯)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார் திருத்தொகை.

---

பூவார்திருநுதன்மேற் பொற்சுட்டியிட்டொளிரக்
கோவாக்குதலை சிலம்புரற்ற - வோவா
தழுவான்பசித்தானென் றுங்கிறைவன்காட்டத்
தொழுவான்றுயர்தீர்க்குந் தோகை - வழுவாமே
முப்பத்திரண்டறமுஞ் செய்தாண்முதிராத
செப்பொத்தகொங்கைத் திருநுதலி - யப்ப
னருளாலேயூட்டுதலு மப்பொழுதேஞானத்
திரளாகிமுன்னின்ற செம்ம - லிருடீர்ந்த
காழிமுதல்வன் கவுணியர்தம்போரேறு
ஊழிமுதல்வ னுவனென்றுகாட்டவலான்
வீழிமிழலைப் படிக்காசுகொண்டபிரான்
பாழியமணைக் கழுவேற்றினான்பாணர்
யாழைமுரித்தா னெரிவாயிடும்பதிக
மாழியுலகத் தழியாமற்காட்டினா
னேழிசைவித்தகன்வந் தேனோரும்வானோருந்
தாழுஞ்சரணச் சதங்கைப்பருவத்தே
பாலையுநெய்தலும் பாடவலான் - சோலைத்
திருவாவடுதுறையிற் செம்பொற்கிழியொன்
றருளாலேபெற்றருளு மையன் - றெருளாத
தென்னவனாடெல்லாந் திருநீறுபாலித்த
மன்னன்மருகல்விடந் தீர்த்தபிரான் - பின்னைத்தென்
கோலக்காவிற்றாளம் பெற்றிக்குவலயத்தின்
மாலக்காலத்தே மாற்றினான் - ஞாலத்து

முத்தின்சிவிகை யரன்கொடுப்பமுன்னின்று
இத்தித்தபாடல் செவிக்களித்தா - னித்திலங்கண்
மாடத்தொளிரு மறைக்காட்டிறைகதவைப்
பாடியடைப்பித்த பண்புடையா - னீடுந்
திருவோத்தூராண்பனையைப் பெண்பனையாக்கென்னும்
பெருவார்த்தைதானுடைய பிள்ளை - மருவினிய
கொள்ளம்பூதூர்க்குழக ஞவாயது கொடுப்ப
வுள்ளமேகோலாக வூன்றினான் - வள்ளன்
மழவன்சிறுமதலை வான்பெருநோய்தீர்த்த
குழகன்குலமறையோர் கோமா - னிலவிய
வையையாற்றேடிட்டு வானீரெதிரோட்டுஞ்
செய்கையான்மிக்க செயலுடையான் - வெய்யவிட
மேவியிறந்தவயில் வேற்கண்மடமகளை
வாவென்றழைப்பித்திம் மண்ணுலகில்வாழ்வித்த
சீர்நின்றசெம்மைச் செயலுடையா - னேர்வந்த
புத்தன்றலையைப் புவிமேற்புரள்வித்த
வித்தகப்பாடல் விளம்பினான் - மொய்த்தொளிசேர்
கொச்சைச்சுரன்றன் கோமானைத்தான்செய்த
பச்சைப்பதிகத் துடன்ப[illegible]ரம்பா
வித்துப்பொருளை விளக்கவலபெருமான்
முத்திப்பகவ முதல்வன்திருவடியை
யத்திக்கும்பத்தரெதி ராணைமனென்னவலோன்
கத்தித்திரிபிறவிச் சாகாத்துளாழாமே
பத்தித்தனித்தெப்பம் பார்வாழத்தந்தபிரான்
பத்திச்சிவமென்று பாண்டிமாதேவியொடுங்
கொற்றக்கதிர்வேற் குலச்சிறையுங்கொண்டாடு
மற்றைப்பொழுதத்தமணரிடுவெந்தீயைப்
பற்றிக்கடுகப்போய்ப் பாண்டியனையென்னவல்லான்
வர்த்தமானீசர் கழல்வணங்கிவாழ்முருகன்
பத்தியையீசன் பதிகத்தேகாட்டின
னத்தன்திருநீல நக்கற்குமன்புடையான்
நத்தமொழிக்கிருதலைத் தாயவாய்கன்னுதலி

கித்திலப்பூண்முலைக்கு நீண்டதடங்கண்ணினுக்குங்
கொத்தார்கருங்குழற்குஞ் [illegible]க்கு
மத்தாமரையடிக்கு மம்மென்குறங்கினுக்குஞ்
சித்திரப்பொற்காஞ்சி செறிந்தபேரல்குலுக்கு
முத்தமிழ்நூலெல்லா முழுதுணர்ந்தபிள்ளையார்க்
கொத்தமணமிதுவென் றுறுதித்தமர்களெல்லாஞ்
சித்தங்களிப்பத் திருமணஞ்செய்காவணத்தே
யற்றைப்பொழுதத்துக் கண்டுடனேநிற்கப்
பெற்றவர்களோடும் பெருமணம்போய்ப்புக்குத்த
னத்தனடியே யடைந்தானழகிதே.

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை.

---

புலனொ டாடித் திரிம னத்தவர் பொறிசெய் காமத் துரிசடக்கிய – புனித நேசத் தொடுத மக்கையர் புணர்வி னுலுற்றுரைசெ யக்குடர், சுலவு சூலைப் பிணிகொ டுத்தொளிர் சுடுவெ ணீறிட் டமணை கற்றிய – அணிவி ளன்முப் புரமெ ரித்தவர் கழலி லேபட் டிடுத வத்தின, ருலகின் மாயப் பிறவி யைத்தரு முணர்வி லாவப் பெருமை யக்கினை – யொழிய வாய்மைக் கவிதை யிற்பல வுபரி பாகப் பொருள்ப ரப்பிய, வலகின் ஞானக் கடலி டைப்படு மமிர்த யோகச் சிவவொ ளிப்புக – வடிய ரோமுக் கருளினைச்செயு மரைய தேவத் திருவ டிக்களே. (௧)

திருநாவுக் கரசடி யவர்நாடற் கதிநிதி - தெளிதேனெனத் தினியசொன் மடவா ருர்ப்பசி முதல், வருவானத் தரிவையர் நடமாடிச் சிலசில - வசியாகச் சொலுமவை துகளாகக் கருதிமெய், யுருஞானத் திரண்மன முருகாநெக் கழுதுகண் ணுழவாரப் படைகையி லுடையான்வைத் தனதமிழ், குருவாகக் கொடுசிவ னடிசூடத் திரிபவர் - குறுகார்புக் கிடர்படு குடர்யோனிக் குழியிலே. (௨)

குழிந்து சுழிபெறுநா பியின்கொண் மயிர்நிரையார் - குரும்பை முலையிடையே செலுந்தகைநன் மடவா, ரழிந்த பொசியதிலே கிடந்திரவு பகனீ - யளைந்தயரு மதுநீ யறிந்திலை கொண்மனமே, கழிந்த கழிகிடுநா ளினங்கிதய நெகவே - கசிந்திதய மெழுநூ றரும்பதிக நிதியே, பொழிந்தருளு திருநா வினெங்களர சினையே - புரிந்துநினை யிதுவே மருந்துபிறி திலையே. (௩)

இலைமா டென்றிடர் பரியா ரிந்திர னேயொத் துறுகுறை வற்றாலு, நிலையா திச்செல்வ மெனவே கருதுவர் நீள்சடை மக்கட லிடையிற்புக், கலையார் சென்றர னெறியா குங்கரை யண்ணப் பெறுவர்கள் வண்ணத்தின், சிலைமா டத்திகழ் புகழா மூருறை திருநா வுக்கர சென்போரே. (௪)

என்பட் டிக்கட்டிய வித்தப்பைக் குரம்பையை - யிங்கிட்டுச் சுட்டபி னெங்குத்தைக் குச்செலுமிது, முன்பிட்டுச் சுட்டிவ ருந்திக் கெத்திக் கென - மொய்ம்புற்றுக் கற்றறி வின்றிக்கெட் டுச்சில, வன்பட்டிப் பிட்டர்க டன்புற்றுப் புத்தியை- வஞ்சித்துக் கத்திவி ழுந்தெச்சுத் தட்டுவ, ரன்பர்க்குப் பற்றிலர் சென்றார்ச்சிக் கின்றில ரந்தக்குக் கிக்கிரை சிந்தித் தப்பித்தரே. (௫)

பித்தரசு பதையாத கொத்தைநிலை யுளதேவு - பெட்டியுரை செய்துசோறு சுட்டியுழல் சமண்வாயர், கைத்தரசு பதையாத சித்தமொடு சிவபூசை - கற்றமதி யினஞோசை யித்தரசு

புகழ்ஞால, முத்திபெறு திருவாள னெற்றுணையின் மிதவாமல்-
கற்றுணையில் வருமாதி, பத்தரசு வசைதீர வைத்ததன த
மிழ்மாலை - பற்பலவு மவையோத நற்பதிக நிதிதானே. (௬)

பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி - பரசுநா வர
சான் பரமகா ரணவீச, னதிகைமா நகர்மேவி யருளினு லம
ண்மூட - ரவர்செய்வா தைகடரு மனகன்வார் கழல்சூடி, னி
தியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை - நெறியரா கு
வர்பாவம் வெறியரா குவர்சால, மதியரா குவரீச னடியரா
குவர்வான முடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே.()

தாமரைநகு மகவிதழ் தகுவன சாய்பெறுசிறு தளிரினை
யனையன - சார்தருமடி யவரிடர் தடிவன தாயினுநல கருணை
யை யுடையன, தூமதியினை யொருபது கொடுசெய்த சோதி
யின்மிகு கதிரினை யுடையன - தூயனதவ முனிவர்க டொழு
வன தோமறுகுண நிலையின தலையின, வோமரசினை மறைகளி
ன் முடிவுக ளோவிடுபரி சொடுதொடர் வரியன - வோவறு
முணர் வொடுசிவ வொளியனை யூறியகசி வொடுகவி செய்தபு
க, ழாமரசுய ரகநெகு மவருள ஞானரசதி கையினர னருளவ-
னுமரசுகொ ளரசெனை வழிமுழு தாளரசுத னடியிணை ம
லர்களே. (௮)

அடிநாயைச் சிவிகைத் தவிசேறித் திரிவித் தறியாவப் ப
ஈதைச் சிறியோர்பாற் செறியுங், கொடியேனுக் கருளைத் திரு
நாவுக் கரசைக் குணமேருத் தனைவிட் டெனையாமொட் டகல்
விற், பிடியாரப் பெறுதற் கரிதாகச் சொலுமப் பிணநூலைப்
பெருகப் பொருளாகக் கருதுஞ், செடிகாயத் துறிகைச் சம
ண்மூடர்க் கிழவுற் றதுதேவர்க் கரிதச் சிவலோகக் கதியே. ()

சிவசம் பத்திடைத் தவஞ்செய்து திரியும் பத்தியிற் சிறந்
தவர் - இலகன் கற்றசிட் டன்வெங்தொளிர் திகழும் பைம்
பொடித் தவண்டணி, கவசம் புக்குவைத் தரன்கழல் கருதுஞ்
சித்தனிற் கவன்றிய-கரணங் கட்டுதற் கடுத்துள களகம் புக்க

